# சங்கடம் தீர்க்கும் சனி பகவான்

ஸ்ரீசாந்தநாயகி சமேத

ஸ்ரீவேங்கீஸ்வரர் கோயில்

வடபழனி

சனிப்பெயர்ச்சி லட்சார்ச்சனை



தொகுப்பு : ஏ.கே. சித்தரஞ்சன்

# வரங்களை அள்ளிக் கொடுக்கும் வள்ளல் ஸ்ரீவேங்கீஸ்வரர் சுவாமி




வடபழனியில் பக்தர்களின் வரங்களுக்கு வாரி வழங்க அருள் வழங்குபவர் வேங்கீஸ்வரர் சுவாமி. நாடி வரும் பக்தர்களுக்கு தாயாக பாசமுடன் அருள் வழங்கும் 'பேசும் தெய்வம்' சாந்தநாயகி அம்மன்.

வேங்கீஸ்வரத்தில் அப்படி என்ன சிறப்பு?

சித்தர்கள் வழிபட்ட கோவில். பதஞ்சலி, வியாக்ரபாதர் சித்தர்கள் 'லிங்கம்' வடிவமைத்து ஈசனை வழிபட்ட தலம். ஆகம விதிகள் படி நிறுவப்பட்டதால், அம்மையும், அப்பனும் பக்தர்களுக்கு பாசத்தை பொழிகிறார்கள்.

முற்பிறப்பு பாவங்களால், இந்த பிறவியில் பாவங்களால், ஏற்பட்ட கஷ்டங்களால் பக்தர்கள் வருந்தி, ''அப்பனே! அம்மையே! காப்பாற்று'' என்று கண்ணீர் மல்க கேட்கும்போது, கருணையுடன் வரங்களை வழங்கி, கஷ்டத்திலிருந்து காத்து ரட்சிக்கின்றனர்.

## கோவிலில் நுழைந்தவுடன் நிம்மதி

ஜோதிடர்கள் பல்வேறு தோஷம் நீங்க பரிகார தலமாக வேங்கீஸ்வரத்துக்கு செல்லச்சொல்கின்றனர். வேங்கீஸ்வரர் கோவிலுக்குள் நுழைந்த மாத்திரத்தில், எந்த பிரச்சினை இருப்பினும், உடன் மனம் அமைதி பெறுவது நிச்சயம். அதுவும் ஸ்ரீவரசித்தி வினாயகரை வணங்கினால் கேட்ட வரம் சித்தியாகும்.

வேங்கீஸ்வரரை தரிசனம் செய்தாலே இந்த பிறவியில் செய்த பாவம், முற்பிறப்பில் செய்த பாவம், பெற்றோர்கள் செய்த வினைகள் அனைத்தும் நீராக கரைந்து விடும். அத்துடன் முடியுமா? தற்போது உள்ள நிலை மாறி, வளம் பெருகும். நிம்மதி கிடைக்கும்.

## பேசும் தெய்வம் ஸ்ரீசாந்தநாயகி

ஸ்ரீசாந்தநாயகி அம்மன் சிலை பேசும் தெய்வமாக உள்ளது. பக்தர்களின் பிரார்த்தனையை காது கொடுத்து கேட்பது போல தோன்றும். நம்மை பார்த்து பேசுவது போல தெரியும். கருணை பொழியும் கண்களை பார்த்தலே நம்பிக்கை வந்துவிடும். அபயம் அளிக்கும் கரத்தை பார்த்தாலே பரவசமாகும். அன்னையின் பாதம் பார்த்தாலே மனக் கண் ணால் பணிந்து சரணடையத் தோன்றும்.

இன்று இந்த கோவிலில் தேர் மண்டபம், தரைத்தளம் என்று பல்வேறு நிர்மாண பணிகளை நிறுவி பக்தர்களுக்கு வசதி செய்து தரும் ஆயிரம் பிறை கண்ட வள்ளல் ஐயா கவுரி சங்கர் அவர்கள் மற்றும் இவரது வழியில் அவரே வியக்கும் வண்ணம் கோவிலின் விஸ்வரூப வளர்ச்சியை செயல்படுத்திய பரம்பரை தர்மகர்த்தா ஜி.பிரேம் ஆனந்த் எம்.ஏ., எல்.எல்.பி. அவர்கள், கோட்டையூர் என். முத்தையா செட்டியார் அவர்கள் மற்றும் எம்.முத்தழகு, தலைமை குருக்கள் தேவசேனாதிபதி என்ற சுரேஷ் சிவாச்சார்யார் ஆகியோருக்கு நன்றி.

வேங்கீஸ்வரம் வாருங்கள். வேண்டும் வரம் பெறுங்கள்.



சிவபக்தியில் **ஏ.கே.சித்தரஞ்சன்**

20/1, புதிய எண்.63, வன்னியர் தெரு,

சூளைமேடு,சென்னை- 600 094,

போன்: 24830100

சிவமயம்

# ஸ்ரீபிரதோஷ பக்தர்கள் சபை

எண். 67, சைதை சாலை, வடபழனி, சென்னை-600 026

## எம் தலைவன் ஸ்ரீ வேங்கீஸ்வரர் அருள் பெற்ற 'சங்கடம் தீர்க்கும் சனி பகவான்'

சென்னை கோடம்பாக்கத்தில் எழுந்தருளியிருக்கும் மிகவும் பழமைவாய்ந்த சோழ மன்னர்களால் உருவாக்கப்பட்ட பல சிவ ஆலயங்களில் முதன்மையான புலியூர் கோட்டத்தில் எழுந்தருளிய ஸ்ரீபதஞ்சலி, வியாக்கரபரதர் முனிவரால் பூஜிக்கப்பட்ட எங்கும் நிறைந்து இருக்கின்ற ஜோதி வடிவமான பக்தர்களுக்கு வேண்டிய அருள்பாலித்து கொண்டிருக்கின்ற ஸ்ரீசாந்தநாயகி உடனுறை ஸ்ரீவேங்கீஸ்வரருக்கு பக்த கோடிகள் விருப்பத்திற்கிணங்கவும், கிராமத்தார்கள் சிவனேச செல்வந்தாள் பொருள் உதவி செய்து கோவிலுக்கு தேர், மண்டபம், தரைத்தளம் வெற்றிகரமாக நிறுவப்பட்டது.

எம் தலைவன் ஸ்ரீவேங்கீஸ்வரர் சுவாமி-சாந்தநாயகி சமேதராக பக்தர்களுக்கு அருள்பாலித்தார். இந்த கைங்கர்யத்தை ஸ்ரீபிரதோஷ பக்தர்கள் சபை வெற்றிகரமாக முடிக்க 'எம் தலைவன்' உடன் இருந்தான். அடுத்து கும்பாபிஷேகமும் தொடருகிறது.

### சனிஸ்வரருக்கு ஏகதின லட்சார்ச்சனை

இடையில் பகவானால் 'ஈஸ்வரன்' பட்டம் பெற்ற சனீஸ்வர பகவானுக்கு ஏக தின லட்சார்ச்சனையை பிரதோஷ பக்தர்கள் சபை நடத்துகிறது. இதையொட்டி 'மக்கள் குரல்' பத்திரிகையாளர் ஏ.கே. சித்தரஞ்சன் தொகுத்த 'சங்கடம் தீர்க்கும் சனிபகவான்' என்னும் நூல் வெளியிடப்படுகிறது. ஸ்ரீவேங்கீஸ்வரர் சுவாமி ஸ்ரீசாந்தநாயகி அம்மனிடம் பாசம் கொண்டவர் சித்தரஞ்சன். திருவொற்றியூர் ஸ்ரீவடிவுடையம்மன் தியாகராஜ சுவாமி கோவிலில் 20 ஆண்டுகளாக வெளிவராத தலபுராணத்தை 'சிவன் அருளால்' தொகுத்து வழங்கி பாராட்டு பெற்ற சித்தரஞ்சன், சனீஸ்வர பகவான் சிறப்புகளை அழகாக எளிமையாக எழுதி உள்ளதற்கு வாழ்த்துக்கள்.

கம்ப்யூட்டரில் அச்சுகோர்த்து, அழகாக வடிவமைக்க உதவிய மக்கள் குரல் ஆசிரியர் ஆர்.முத்துக்குமார், எக்சிகியூடிவ் டைரக்டர் பி. ஜீவானந்தம், என். முத்துகனி, முத்து, சக்திவேல், கண்ணன் அனைவருக்கும் நன்றி.

இந்த நூலை அழகாக, தொகுப்பாக வண்ண அட்டையுடன் இலவசமாக அச்சிட்டு, நன்கொடையாக வழங்கிய ஆன்மீகம் வளர்க்கும் 'அஷ்டலட்சுமி' அருள் பெற்ற ஸ்ரீஅக்ஷயா கிராபிக்ஸ் வண்ண ஆப்செட் உரிமையாளர் என்.நாராயணமூர்த்தி அவர்களுக்கு நன்றி.



ஸ்ரீ வேங்கீஸ்வரர் கோயில் விழாக்களுக்கு 'ஆஸ்தான' அச்சகராக விளங்கும் ஸ்ரீஅக்ஷயா கிராபிக்ஸ், பல்கி பெருகி வளம் கொழிக்க ஸ்ரீவேங்கீஸ்வரர் சுவாமி ஸ்ரீசாந்தநாயகி சுவாமி அருள்புரியட்டும்.

இந்த லட்சார்ச் சனையில் பிரசாதம் வைக்க துணி பைகளும், தேங்காய், பழம், பூ போன்றவை வழங்கிய அன்பு நெஞ்சங்களுக்கு நன்றி!

'எங்கள் தலைவன்' ஸ்ரீவேங்கீஸ்வரர் சுவாமி- சாந்தநாயகி அம்மனின் வழிபாடுகளுக்கு முழு ஆதரவு அளித்து ஒத்தழைத்து சிவநெறியில் மக்களை ஈடுபடுத்தும் தமிழக பரம்பரை அறங்காவலர்கள் சங்க பொதுச் செயலாளரும், இந்த கோவில் பரம்பரை டிரஸ்டியுமான 'ஆன்மீக நெறிச் செல்வர்' ஜி.பிரேம் ஆனந்திற்கும், இந்த கோவில் கட்டிக்காத்து பொதுமக்களுக்கு இறைவனின் அருள் கிடைக்க அனுதினமும் தியானிக்கும் ஆயிரம் பிறை கண்ட வள்ளல் ஐயா கவுரிசங்கர் அவர்களுக்கும் நன்றி உரித்தாகுக!

வேத ஆகமங்களின் விதிப்படி கோவிலில் வழிபாடுகளை முறையுடன் கடைப்பிடிக்கும் தலைமை குருக்கள் தேவ சேனாதிபதி என்ற சுரேஷ், சந்திரசேகர், குரு மற்றும் இதர அர்ச்சகர்களுக்கும் நன்றி! நன்றி!!

ஸ்ரீபிரதோஷ பக்தர் சபையின் திட்டங்களுக்கு உறுதுணையாக உதவும் சீனிவாச ஹெர்லே அவர்களுக்கு நன்றி!

கோவிலுக்கு வரும் பக்தர்களை இன்முகத்துடன் வரவேற்பு வழிபட உதவும் கோயில் ஊழியருக்கும் நன்றி! நன்றி!

இந்த இறைபணி சிறக்க உதவிய அனைவருக்கும் நன்றி! நன்றி!!



**கோட்டையூர் என். முத்தையா செட்டியார்**

தலைவர்,

ஸ்ரீபிரதோஷ பக்தர்கள் சபை.

சன்னதி தெரு, வடபழனி, சென்னை-26

போன் : 23775245.

# சங்கடம் தீர்க்கும் சனி பகவான்



வேங்கீஸ்வரர் கோவிலில் மேற்கு நோக்கி, அருள் பாலிக்கும் சனி பகவான், இங்கு தனி சன்னதியில் பக்தர்களுக்கு தரிசனம் கொடுக்கிறார். சிவனால், 'ஈஸ்வரன்' பட்டம் கொடுக்கப் பட்டு, 'சனி ஈஸ்வரன்' என்ற பெயரோடு ஈசனின் கட்டளையை, அவரவர் பாவம், புண்ணியத்துக்கு ஏற்ப நிறைவேற்று கிறார்.

கடுமையானவர், கொடூரமான வர், 'சிவனையே துரத்தியவர்' என்று பயமுறுத்தப்பட்டாலும், வேங்கீஸ்வரர் கோவில் சனீஸ்வர பகவான் கருணையானவர். நம்பிக்கையுடன், துதித்து வழிபட்டு ஸ்ரீவேங்கீஸ்வரர்-சாந்தநாயகியை வழிபடும் பக்தர்களை கடுமையை தாங்கிக் கொள்ளும் சக்தியையும், மனதுக்கு அமைதி யையும் சனீஸ்வர பகவான் வழங்குகிறார். 'கண்ணீருடன் காப்பாத்து!' என்று கருங்குவளை நீல மலர்கள், வன்னி இலை சாத்தி, தீபமேற்றி சனிக்கிழமைதோறும் இடைவிடாது வந்து சனீஸ்வர பகவானை வழிபட்டால், பக்தரின் சிரமத்தை பார்த்து, கடுமையை குறைக்கிறார். இதனால் பக்தர்கள் கூட்டம் அலை மோதுகிறது.

இந்த சனீஸ்வரருக்கு மட்டும் என்ன விசேஷம்? ஏன் ஜோதிடர்கள் ஸ்ரீவேங்கீஸ்வரர் கோவில் சனீஸ்வரருக்கு பரிகாரம் செய்ய சொல்கிறார்கள்.

## சித்தர் முக்தி

400 ஆண்டுகளுக்குமுன் சித்தர்கள் வாழ்ந்த இந்த வேங்கீஸ்வரம் பெயர் புலியூர். ஸ்ரீவேங்கீஸ்வரர் கோவில் சித்தர்கள் வசித்த பகுதி ஆதலால், ஒரு சிவ சித்தர் தற்போது சனீஸ்வரர் சன்னதியில் முக்தி அடைந்ததாக வரலாறு உண்டு. சித்தர்கள் தம்மை நாடுபவர்களுக்கு நலன்கள் வழங்குவது

அனைவரும் அறிந்ததே. அந்த இடத்தில் சனீஸ்வரன் சன்னதி கொண்டு உள்ளதால், இந்த சனீஸ்வரன், 'சாந்த சொரூபியாக' மக்களுக்கு அருள் பாலிக்கிறார். இதை அறிந்த ஜோதிடர்கள் 'சனி' பரிகார தலமாக வேங்கீஸ்வரத்தை பரிந்துரை செய்கின்றனர்.

சனிக்கிழமைகளில் காலை மாலையில் சனீஸ்வர பகவானுக்கு எள் கட்டிய திரியில் நல்லெண்ணை விளக்கு ஏற்றி வழிபட்டால் சூரியனைக் கண்ட 'பனியென' கஷ்டங்கள் விலகும்.

சனீஸ்வர பகவான் தோத்திர பிரியர். தங்கள் ராசி, நட்சத்திரம் சொல்லி, அர்ச்சனை செய்து முறையாக மந்திரங்கள் சொல்லி அர்ச்சனை செய்தால் சனீஸ்வர பகவான் மகிழ்ச்சி அடைவார். வீட்டிலிருந்து செருப்பு அணியாமல் கால்நடையாக நடந்து வந்து மலர்களால் அலங்கரித்து பூஜை செய்தால், சங்கடம் தீரும் நிச்சயம்.

''சனி கொடுத்தால் யார் மறுப்பார்'' ''சகல சௌபாக்கியமும் தருவார் சனீஸ்வர பகவான்''.

ஸ்ரீவேங்கீஸ்வரர் கோவில் சனிப் பெயர்ச்சி வெகு விமர்சையாக கொண்டாடப்படுகிறது.

எந்த கோவிலில் முறையாக ஆகம வழிப்படி வழிபாடுகள் நடைபெறுகிறதோ அங்கு இறைவன் மகிழ்ந்து மக்கள் வரங்களுக்கு வளங்களை வாரி வழங்குவார். ஸ்ரீவேங்கீஸ்வரர் கோவில் இதில் மிகச் சிறந்தது. அர்ச்சகர்கள் தலைமை குருக்கள் தேவசேனாதிபதி என்ற சுரேஷ் தலைமையில் முறையாக ஏழை, பணக்காரர் பாகுபாடின்றி அனைவருக்கும் முறையாக இறைவனை வழிபட உதவுகின்றனர். இறைவனுக்கும், தொண்டனுக்கும் பாலமாக இருக்கின்றனர். இதனால் பக்தர்கள் இந்த கோவிலுக்கு ஆர்வத்துடன் வருகின்றனர்.

பிரதோஷமா? பவுர்ணமியா? சங்கடகர சதுர்த்தியா? ஆருத்திரா தரிசனமா? அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், சண்டேசுவரர் அவதரித்த நட்சத்திர நாளா? எந்த விசேஷமானாலும் அபிஷேக ஆராதனைகளை முறையாக நடத்தி பக்தர்களை பரம்பரை டிரஸ்டி 'ஆன்மீக வள்ளல்' பிரேம் ஆனந்த் பரவசபடுத்துவார்.

## ஸ்ரீபிரதோஷ பக்தர்கள் சபை கொண்டாடும் சனிப்பெயர்ச்சி லட்சார்ச்சனை

கோவில்கள் பல இருந்தாலும், சிவன் கோவில் கட்டுமான பணி, தேர் பணியை எடுத்துச் செய்வது என்பது மிகவும் பிரச்சினையான விஷயம் என்பது அனைவரும் அறிந்தே!

ஆன்மீக நெறிச்செல்வர் என்.முத்தையா செட்டியார் தலைமையில் ஸ்ரீபிரதோஷ பக்தர் சபை வித்தியாசமாக துணிந்து செயல்பட்டு, ஸ்ரீவேங்கீஸ்வரரை 'எங்கள் தலைவனாக' பாவித்து முன் நிறுத்தி, எடுத்த திட்டங்களை வெற்றிகரமாக செயல்படுத்தி வருகிறது.

இதன் ஒரு அங்கமாக சனிப்பெயர்ச்சியின் போது ஏக தின லட்சார்ச்சனை விழா நடத்துகிறது.

இரண்டரை ஆண்டுக்கு ஒருமுறை சனீஸ்வர பகவான் மாறுவதால், பக்தகோடிகள் இந்த நாளில் சனீஸ்வர பகவானுக்கு அர்ச்சனை செய்து, பரிகாரம் செய்து கொள்வது வழக்கம்.

உலகம் முழுவதும் போர் பயம்! கொடிய நோய் பீதி! ஒரு பக்கம் தண்ணீர் கஷ்டம்! மறு பக்கம் வெள்ளம்! இந்த பிரச்சினைகளில் இந்த உலக் மக்களை காக்க, இந்தியா செழிக்க, தமிழ்நாட்டு மக்கள் நலமுடன் திகழ வேண்டி

சனீஸ்வர பகவானே!
சங்கடங்களை தீர்த்து,
மங்களம் பொங்கவும்
சச்சரவின்றி சாகா நெறியில்
இந்த உலகில் வாழ
உன் அருளை தந்து அருள்வாய்

என்று ஒரே நாளில் லட்ச அர்ச்சனை காலை 7.30 மணி முதல், இரவு 10 மணி வரை நடைபெறுகிறது.

வேங்கீஸ்வரர் கோவிலில் நடைபெறும் ஏக தின சனிப்பெயர்ச்சி லட்சார்ச்சனை விழாவில், பக்தர்கள் குடும்பத்தில் உள்ள ஒவ்வொருவருக்கும் அவரவர் ராசி, நட்சத்திரம் சொல்லி அர்ச்சனையில் பங்கேற்பது சிறப்பம்சம்.

ஏதோ பணம் செலுத்தி ரசீது வாங்கி விட்டோம். பிரசாதம் நாளை வாங்கிக் கொள்ளலாம் என்று டிக்கெட் வாங்கினால் பாவம்தான் சேரும். லட்சார்ச்சனையில் உடன் இருந்து பக்தியுடன் வழிபட்டால் பலன்கள் கைமேல் தெரியும். பிரசாதம் அன்று ஒரு நாள் மட்டும் வழங்கப் படுவதால், பக்தர்கள் சனீஸ்வர பகவானை தரிசித்து வழிபட்டு, பிரசாதம் பெறலாம்.

## யார் அந்த சனீஸ்வரன்?

சூரிய பகவானுக்கும் சாயாதேவிக்கும் புத்திரனாக அவதரித்தவர். சர்வ வல்லமை பெற்றவர். நீதி நெறி தவறாதவர். நேர்மையாக, பாரபட்சமின்றி செயல்படுவர். படைத்தவரையே பயமுறுத்தியவர். சிவன், திருமால், பிரம்மா என மும்மூர்த்திகளையும் பிடித்தவர். இவரால் அவர்கள் 'பட்டது' அனைவருக்கும் தெரியும்.

பெருமாளின் தொப்புள் கொடியில் உதித்தவர் பிரம்மா. உலகை

படைக்கும் போது, ஏழு ரிஷிகளை பிரம்மா படைத்தார். அவர்களில் ஒருவர் 'மரீசி மகரிஷி'.

மரீசீயின் மகன் கசியப்பர். கசியப்பரின் மூத்த மகன் சூரியன்.

சூரியனுக்கு உஷா, சாயாதேவி மற்றும் 2 பேர் சேர்த்து 4 மனைவிகள்.

உஷாதேவி சூரியனுடன் வாழ்ந்து எமன், யமுனை மற்றும் 2 பேர் சேர்த்து 4 குழந்தைகளை பெற்றார்.

சூரியனின் வெப்பம் தாங்காமல் போகவே, தன் நிழல் மூலம், தன்னைப் போன்ற சாயாதேவியை உருவாக்கினார்.

தன்னைப் போன்ற வடிவம் கொண்டவளை சாயாதேவி என அழைத்தார். ''என் 4 குழந்தைகள் எமன், யமுனை மற்றும் 2 பேரை உன் குழந்தை போல வளர்த்து வா'' என்று உத்தரவிட்டார்.

சாயாதேவிக்கு சனி மற்றும் 3 குழந்தைகள் பிறந்தன.

சாயாதேவி என்றாவது உண்மை தெரிந்தால், அனைத்தையும் சூரியனிடம் சொல்லி விடுவேன் என்று உஷாதேவியிடம் கூறியிருந்தாள்.

உஷாதேவி தனது தந்தை இல்லம் சென்று, பிறகு குதிரை உருவில் வடநாடு சென்று தியானத்தில் ஈடுபட்டார்.

சாயாதேவிக்கு குழந்தை பிறந்த பிறகு, உஷா குழந்தைகளிடம் பாகுபாடு காட்டினாள். எதிர்த்து கேட்ட எமன், காலை தூக்கி தேவியை உதைக்க காலை தூக்கினான்.

'உன் கால் முறியட்டும்' என எமனுக்கு சாயாதேவி சாபம் இட்டாள்.

சூரியன் திரும்பி வந்தார்.

எமன் விஷயத்தை போட்டு உடைத்தார்.

தாயை உதைக்க காலை தூக்கியது தவறு என்று சூரியன் எமனை கண்டித்தார்.

சாயாதேவி சூரியனிடம் உஷாதேவி செய்த ஏற்பாடுகளை விவரித்தார்.

சூரியன் கோபம் நீங்கினான்.

உஷாதேவியை தேடி சென்று, ஆண் குதிரையாக சூரியன் சென்று, மனைவியை திரும்ப அழைத்து வந்தான்.

சாயாதேவியின் மகன் 'சனி' என்னும் 'கிருத சர்மா', காசிக்கு சென்று லிங்கத்தை பிரதிஷ்டை செய்தான். ஊண், உறக்கமின்றி இடைவிடாது சிவனை வழிபட்டான். தவத்தை மெச்சிய 'எம் தலைவன்' ஈஸ்வரன்,

தனக்கு இணையாக சேர்த்து பக்தர்கள் 'சனி ஈஸ்வரன்' என்று பெயரை வழிபட வைத்தார்.

நவக்கிரங்களில் ஒருவனாக சனீஸ்வரனை ஈஸ்வரன் இடம் பெறச் செய்தார்.

## 30 ஆண்டு வாழ்ந்தவரில்லை; 30 ஆண்டு வீழ்ந்தவரில்லை

ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் சனி பகவான் தன் ஆதிக்கத்தை நிலைநாட்டத் தவறுவதில்லை. சனீஸ்வரன் ஒரு ராசியில் தங்கும் காலம் 30 மாதங்கள். அவன் ராசி சக்கரம் 12யும் ஒரு முறை சுற்றி வர 30 ஆண்டுகள் ஆகின்றன. கிரகங்களிலேயே மிக மெல்ல நகர்ந்து செல்லும் கிரகம் சனி பகவானே. இக்காரணத்தாலேயே முப்பது ஆண்டுகள் வாழ்ந்தவரில்லை. முப்பது ஆண்டுகள் வீழ்ந்தவர்கள் இல்லை என்று சொல்லப்படுகிறது. சனீஸ்வரன் நீதி வழுவாதவன், ஒருவருக்கு தேவை இல்லாமல் தீமை செய்யமாட்டார். அவரவர் பூர்வ புண்யங்களுக்கேற்ப பலன்களை அளிப்பவர்.

ஆனால் சனிபகவான் தன் கடமையிலிருந்து பிறழமாட்டார். ஒருவருடைய ஜாதகத்தில் லக்கினத்திற்கு அல்லது ராசிக்கு 4வது இல்லத்திற்கு சனிபகவான் கோசாரப்படி வரும்போது ''அர்த்தாஷ்டமச் சனி'' துவங்குகிறது. அவர் அந்த ராசியில் தங்கும் முப்பது மாதமும் அர்த்தாஷ்டமச் சனி காலமாகக் கருதப்படுகிறது.

கோசாரப்படி லக்கினத்திற்கு அல்லது ராசிக்கு ஏழாம் ராசிக்கு கவான் வரும்போது ''கண்ட சனி'' என்று கூறப்படுகிறது. சனிபகவான் அந்த ராசியில் தங்கியுள்ள முப்பது மாதங்களும் கண்ட சனிக் காலமாகும்.

கோசாரப்படி லக்கினத்திற்கு அல்லது ராசிக்கு எட்டாவது ராசிக்கு சனி பகவான் வரும்போது அஷ்டமச் சனியாக கூறப்படுகிறது. அந்த ராசியில் சனி பகவான் தங்கியுள்ள முப்பது மாதங்களும் அஷ்டமச் சனி காலமாகும்.

ஒருவர் ஜாதகத்தில் சந்திரன் தங்கியுள்ள சந்திலா லக்கினம் அல்லது ராசிக்கு 12ம் இல்லத்திற்கு சனிபகவான் கோசாரப்படி வரும்போது ஏழரை நாட்டுச் சனி ஆரம்பமாகிறது. அந்த ராசியில் சனி பகவான் தங்கியுள்ள காலத்தை ''கிரக சனி'' என்று அழைக்கப்படுகிறது.

ஏழரை நாட்டுச் சனி 12ம் ராசியிலிருந்து முதல் ராசி சந்திரன் தங்கியுள்ள ராசிக்கு கோசாரப்படி வரும் காலத்தை ''ஜென்மச் சனி'' என்று அழைக்கப் படுகிறது. இது இரண்டரை ஆண்டு காலமாகும்.

மூன்றாவது இரண்டரை ஆண்டு சனியின் காலம் இரண்டாவது ராசிக்கு சந்திரா லக்கினத்திற்கு சனி பகவான் வரும்போது அதை ''பாதச் சனி'' அல்லது ''கழிவு சனி'' என்று அழைக்கப்படுகிறது.

## பரிகாரம் செய்து கருணை பெறுக

அர்த்தாஷ்டச் சனி, கண்ட சனி, அஷ்டமச் சனி, ஏழரை நாட்டுச் சனி ஆகிய காலங்களில் ஜாதகர்கள் சனீஸ்வர பகவானின் கடுமையைக் குறைக்கவும் அவருடைய கருணையால் நன்மைகள் பல அடையவும், அவரை முறைப்படி பூசித்து, விரதமிருந்து அந்தந்த சனி காலத்திற்குச் சாந்தியாக பரிகாரமாக கூறப்பட்டுள்ள தான தர்மங்களைச் செய்து வரவேண்டும். மேலும் எல்லா காலங்களிலும் சனீஸ்வரனின் கருணையைப் பெற தினமும் ''சனீஸ்வரரின் காயத்திரி மந்திரம்'' தசரத சக்கரவர்த்தி சனீஸ்வர பகவானை துதித்த தோத்திரம், ''தார்த்தசன தோத்திரம்'', திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிய கோளறு பதிகம் ஆகியவற்றை உச்சரித்து வரலாம்.

நீலாஞ்சன சமா பாசம்
ரவி புத்ரம் யமாக் ரஜம்
ச்சாய மார்த்தாண்ட சம்பூதம்
தம் நமாமி சனைச்சரம்

என்று இந்த சுலோகத்தை காலை, மாலை சொல்லி வந்தால் தீமைகள் அகலும், நன்மைகள் பெருகும்.

## சனீஸ்வரன் - யந்திரம்

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 4 | 6 | 5 | 1 | 3 | 2 | 7 | 9 | 8 |
| 7 | 9 | 8 | 4 | 6 | 5 | 1 | 3 | 2 |
| 1 | 3 | 2 | 7 | 9 | 8 | 4 | 6 | 5 |
| 2 | 1 | 3 | 5 | 4 | 6 | 8 | 7 | 9 |
| 5 | 4 | 6 | 8 | 7 | 9 | 2 | 1 | 3 |
| 8 | 7 | 9 | 2 | 1 | 3 | 5 | 4 | 6 |
| 3 | 2 | 1 | 9 | 8 | 7 | 6 | 5 | 4 |
| 6 | 5 | 4 | 3 | 2 | 1 | 9 | 8 | 7 |
| 9 | 8 | 7 | 6 | 5 | 4 | 3 | 2 | 1 |

## சுபமோ, கெடுதியோ பணிந்தால் பலன் நிச்சயம்

ஒருவர் ஜாதகத்தில் சனிபகவான் நல்லவராகவும் சுப பலன்கள் அளிப்பவராகவும் இருக்கலாம். அல்லது சனி பகவான் கெட்டவராகவும், கொடுமையாக நடக்க கூடியவராகவும் இருக்கலாம். இருசாராருமே சனிபகவானின் தசை நடக்கும் காலங்களில் ஒவ்வொரு கிரகங்களின் புத்தி காலத்தில் பரிகாரமாகவும் சனீஸ்வர ப்ரீதியாகவும் சிலவற்றைச் செய்தால் நன்மைகள் மேலும் நன்மையாகவும், தீமைகள் குறைந்து நன்மைகள் ஏற்படுவதாகவும் நடைபெறும் பரிகாரம், சாந்தி ப்ரீதி முதலியவற்றைச்

செய்யும்படி பெரியோர்கள் கூறுவதால் அவற்றைச் செய்து நன்மை அடையலாம். சாந்தியாகக் கூறப்பட்டவற்றைச் செய்ய வசதி இல்லாதவர்கள் பொன் வைக்குமிடத்தில் பூ வைப்பது போல செய்ய வேண்டிய தான தர்மங்களை மனதில் நினைத்து சிறு தொகை யைத் தட்சிணையாக அளிக்கலாம். அதற்கும் பூர்ண பலன் கிடைக்கும்.

| | | |
|---|---|---|
| சனி தசை | சுய புத்தி | எள் தானம் |
| சனி தசை | புதன் புத்தி | பால் தரும் எருமை தானம் |
| சனி தசை | கேது புத்தி | மிருத்யுஞ்சய ஜபம் செய்தல் |
| சனி தசை | சுக்கிரன் புத்தி | 5 வெள்ளாடுகள் தானம் |
| சனி தசை | சூரியன் புத்தி | ஆதித்ய ஹிருதயம் படித்தல் சூரிய நமஸ்காரம் செய்தல் |
| சனி தசை | சந்திரன் புத்தி | வெள்ளைப் பசு தானம் |
| சனி தசை | செவ்வாய் புத்தி | பால் தரும் எருமை தானம் |
| சனி தசை | ராகு புத்தி | எருமைக்கடா தானம் |
| சனி தசை | குரு புத்தி | செம்மறி ஆடு தானம் |

## அர்த்தாஷ்டம, கண்டம, அஷ்டம, ஏழரை சனி

அர்த்தாஷ்டம், கண்டம, அஷ்டம, ஏழரைச் சனி வந்த காலங்களில் சனிபகவானின் தீட்சண்யத்தைக் குறைக்க அவரை மனம் குளிர வைக்க சுலபமான பல பரிகாரங்களைப் பெரியோர்கள் கூறியுள்ளார்கள். அவற்றைச் செய்வதால் தோத்திரப் பிரியரான சனி பகவானின் மனதை மகிழ்விக்கலாம். அதன் மூலம் அவர் தீமைகளைக் குறைத்து நன்மைகள் செய்வார்.



தினமும் ஓர் ஏழைக்கு உணவு அளிக்கலாம்.

புது இரும்பு வாணலியில் எள் எண்ணெய் நிரப்பி அதில் முகத்தைப் பார்த்துவிட்டு தட்சிணையாக சிறிது பணத்தைப் போட்டு ஓர் ஏழைக்குத் தானம் செய்யலாம்.

## எள் சாதம், சனிக்கிழமை விரதம்

எள் சனீஸ்வரனுக்குப் ப்ரீதியான தானியம். எள் சாதம் கலந்து காகத்திற்கு வைக்கலாம். பலருக்கு உண்ணக் கொடுக்கலாம்.

கறுப்பு வஸ்திரம் தானம் செய்யலாம்.

சனிக்கிழமை விரதம் இருக்கலாம்.

சிறிது எள் துணியில் முடிந்து விளக்கில் திரியாக வைத்து எள் எண்ணை விட்டு சனீஸ்வரன் சந்நதியில் விளக்கு ஏற்றி வைக்கலாம்.

தினசரி காலை நீராடி ஆகாரம் ஏதும் உண்ணாமல் நவக்கிரக பிரதட்சணம் செய்து வரலாம்.

## சனீஸ்வரராக எண்ணி ஏழைகளுக்கு உணவளித்து வணங்குக

ஓர் ஏழைக்கு அன்னமிட்டு தோல் நீக்காத உளுந்தை கறுப்புத் துணியில் முடிந்து தாம்பூலம் தட்சிணையுடன் கொடுக்கலாம்.

சனிக்கிழமைகளில் ஒருவருக்கு எள்ளுச் சாதம் சர்க்கரைப் பொங்கல் உண்ணச் செய்து தாம்பூலம் தட்சிணை அளித்து அவரை சனீசுவரராகக் கருதி நமஸ்கரிக்கலாம்.

சனிபகவானுக்கு காராம் பசுவின் பாலை அபிஷேகம் செய்யலாம். ஜன்ம நட்சத்திரம் அல்லது சனிக்கிழமைகளில் அபிஷேகத்துடன் அர்ச்சனையும் செய்யலாம். இது சனிபகவான் பிரீதிக்காகவும் பரிகாரமாகவும் அமையும்.

## சனி பிரதோஷம்: இரட்டை அருள்

சுக்ல பட்சம் அல்லது கிருஷ்ண பட்சத்தில் வரும் சனிப் பிரதோஷத்தன்று விரதமிருப்பது சனீஸ்வரனுக்கு பிரீதியானது. குறிப்பாக கிருஷ்ண பட்சத்தில் வரும் சனிப் பிரதோஷம் விசேஷமானது. அன்று விரதம் இருந்தால் பரமேஸ்வரனின் அருளைப் பெறுவதுடன் சனீசுவரனை மகிழ்வித்தது போலவும் ஆகும்.

சனிப் பிரதோஷத்தன்று மவுன விரதம் இருந்து சிவ புராணம் படிக்கச் சொல்லிக் கேட்பதால் சனிக்கும் பரிகாரமாக அமையும்.

ராமாயணத்தில் சுந்தர காண்டம் பாராயணம் செய்யலாம்.

இரும்பு அகலில் நல்லெண்ணை, இலுப்ப எண்ணை, நெய் ஆகிய மூன்றையும் விட்டு எள் முடிந்த துணியை திரியாகப் போட்டு சனீசுவரர் சந்நதியில் தீபம் ஏற்றி வைக்கலாம்.

## சனி பகவான் காயத்ரி மந்திரம்

தினமும் காலையிலும் மாலையிலும் சனிபகவானின் காயத்ரி மந்திரத்தை 108 முறை ஜபிப்பதால் பல நன்மைகள் ஏற்படும். செல்வம் சேரும். நோய்கள் அகலும். குடும்பம் சுபிட்சமாக இருக்கும்.

## சனிபகவான் காயத்ரி மந்திரம்

காகத்வஜாய வித்மஹே
கட்க ஹஸ்தாய தீமஹி
தந்நோமந்தா பிரசோதயாத்

வசதி படைத்தவர்கள் சாந்தி ஹோமம் செய்ய விரும்பினால் முதலில் சனீஸ்வரனின் அதி தேவதையான யமதர்மனுக்கும், பிரத்யதி தேவதையான குருபகவானுக்கும் பூஜை செய்ய வேண்டும். பிறகு சனீசுவரருக்குச் சாந்தி ஓமம் செய்வதால் ஓமம் பூர்த்தி அடையும்.

சாந்தி ஹோமத்தைத் தக்க பெரியோர்களைக் கொண்டு செய்ய வேண்டும். சாந்தி ஹோமம் செய்யும் காலத்தில் மூன்று, ஐந்து, ஒன்பது பேருக்காவது உணவளித்து வஸ்திரம் தட்சணை கொடுக்க வேண்டும்.

திருஞான சம்பந்த சுவாமிகள் அருளிய கோளறு பதிகம், தசரத சக்கர வர்த்தியின் சனீசுவராஷ்டகம், வறுமையைப் போக்கும் பாடல் ஆகியவற்றை படிக்கலாம்.

இவை அனைத்தும் சனீசுவரப்ரீதியாகவும் சாந்தியாகவும் அமையும்.

## எப்படி வழிபடுவது?

சனிக்கிழமை காலை குளித்து சுத்தமான ஆடை உடுத்தி கொள்ளவும். எள்ளு சாதம், எள் கலந்த பலகாரம், பட்சணங்கள், கசப்பு பதார்த்தங்கள் படைத்து பழம், தேங்காய் வெற்றிலை பாக்கு வைக்கவும் சனிக்கிழமை தோறும் விரதம் இருக்கவும். எள்ளை ஒரு சுத்தமான வெள்ளைத் துணியில் சிறிது போட்டு கட்டி, திரி போல் திரித்து விளக்கில் போட்டு எள்ளு எண்ணைவிட்டு தீபம் ஏற்றவும்.

பூஜை முடிந்ததும் எள்ளுசாதம் முதலிய வற்றில் சிறிது எடுத்து ஓர் இலையில் வைத்து காக்கைக்கு சாப்பிட வைக்கவும்.

### தியான சுலோகம்

நிலாம்பரே நீலவடி
கிரீடிக்ருதர ஸ்தித: சூராஸ்கார்தனுமான்
சதுர்புஜ: தா்யசுத ப்ரகாந்த:
சாதாஸ்து யஹ்யம் வரத: ப்ரசந்த்
சகல நலம் தரும்

# சனி பகவான் அஷ்டோத்திரம்

ஓம் சநீஸ்வராயநம
ஸாந்தாயநம
ஸர்வபீஷ்டப்ரதாயிநேநம
சரண்யாயநம
வரேண்யாநம
ஸர்வேஸாயநம
ஸௌம்யாயநம
ஸுவந்த்யாயநம
ஸுரலோகவிஹாரிணேநம
ஸுகாஸநோபவிஷ்டராய நம
ஸுக்தராயநம
சுநாயநம

ஓம் நீலாம்பரவிபூஷாயநம
நிஸ்சலாயநம
வேத்யாயநம
விதிருபாயநம
விரோதாதாரபூமயேநம
வைராஸ்பதஸ்பாவாநம
வஜ்ரதேஹாயநம
வைராக்யதாயநம
வீராயநம
வீதரோக்பயாயநம
விபத்பரம்பரேக்யநம
விஸ்வவந்த்யாயநம
க்ருத்த்வ ஹாயநம

ஓம் கநருபாயநம
கநஸாரவிலேபாயநம
கநாபரணதாரிணே நம
ஜத்யோதாயநம
மந்தாயநம
மந்தசேஷ்டாயநம
மஹநீயகுணாத்மநேநம
மந்த்யபாவனபாதாயநம
மஹோஸாயநம
ஸாயாபுத்ராயநம
ஸர்வாயநம
ஸர்தூணீரதாரிணேநம
சாஸ்திரஸ்வாபாயாநம
கஞ்சலாயநம
நீலவர்ணாயநம
நித்யாயநம
நீலாஞ்சனவிபாயநம
சரிஷ்டாயநம
வஜ்ராங்குஸகராயநம
வரதாயநம
அபயஹஸ்தாயநம
வாமநாயநம
ஜேஷ்டாபத்நீஸமேத்ராய
ஸ்ரேஷ்டாயநம
அமிதாபா பிஷேணநம
கஷ்டௌகநாஸகாயநம
ஆர்யபுஷ்டிதாயநம
ஸ்துத்யந்யநம
ஸ்தோத்ரகமயாயநம
பக்திவஸ்யாயநம

ஓம் சூர்யாயநம
குருபிணேநம
குத்ஆதாயநம
குணாட்யாயநம
கோசாராயநம
அவித்யாமூயிபாஸாயநம
வித்யா விதயாஸவ ரூபிணேநம
ஆயுஷ்யகாரணாயநம
ஆபத்துத்தந்தேநம
விஷ்ணுபக்தாயநம
வஸிநேநம
விவிதாகமவேதிநேநம
விதிஸ்துயாயநம
வந்தியாயநம
விருபாக்ஷாயநம
வரிஷ்டாயநம
கேஸாயநம
கக்கேஸாயநம
புவநீலாம்பராயநம
காடிந்யமாநஸாயநம
ஆர்யகணஸ்துத்யாயநம
நீலச்சத்ராயநம
நிதாயாயநம
நிர்குணாயநம
குணாத்மநேநம
நிராமயாயநம
நிந்த்யாயநம
வந்தநீயாயநம
தீராயநம

பாநவேநம
பாநுபுத்ராயநம
பந்யாயநம
பாவநாயநம
தநுர்மண்டலஸம்ஸ்தாய நம
தந்தாயநம
தநுஷ்மதேநம
தநுப்ரகாஸ்தேஹாயநம
தாமஸாயநம
அஸேஷஜனவந்யாயநம
அஸேஷபலதாயினேநம
வஸிக்ருதஜநேஸாயநம
பஸூநாம்பதயேநம
திவ்வதேஹாயநம
தீநார்திஹரணாயநம
தைந்யநாஸகராய்நம
ஆர்யஜந்கண்யாயநம
க்ரூராயநம
காமக்ரோதகராயநம
களத்ரபுத்ரஸத்ருத்வ காணாயநம
பரிஸோஷிதபக்தாயநம
பரபீதிஹரயாநம
பக்தஸங்கமநோபீஷ்டபந் தாயநம
ஸ்ரீமத்சந்ஸவராயநம

நாநாவித பரிமள பத்ர புஷ்பாணி சமர்ப்பயாமி.

## நவக்கிரங்களை கட்டுப்படுத்த ஈசனை வழிபடும் திருஞான சம்பந்தர் கோளறு பதிகம்

வேயுறு தோளி பங்கன் விடமுண்ட கண்டன்
மிக நல்ல வீணை தடவி
மாசறு திங்கள் கங்கை முடிமேலணிந்தென்
உளமே புகுந்த அதனால் 1
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி
சனி பாம்பிரண்டு முடனே
ஆசறும் நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே.
என்பொடுகொம் பொடாமை இவை மார்பிலங்க
எருதேறிமுழையுடனே
பொன் பொதி மத்த மாலை புனல் சூடிவந்தென்
உளமே புகுந்த அதனால் 2
ஒன்பதொடொன்றா டேழு பதினெட்டொடாறு
முடனாய நாள் களவைதாம்
அன்பொடு நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே.
உருவளர் பவளமேனி ஒளி நீறணிந்து
உமையோடும் வெள்ளை விடைமேல்
முருகலர் கொன்றை திங்கள் முடிமேலணிந்தென்
உளமே புகுந்த அதனால் 3
திருமகள் கைய தூர்தி செயமாது பூமி
திசை தெய்வமான பலவும்
அருநெறி நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே.
மதி நுதல் மங்கையோடு வடபாலிருந்து
மறையோதுமெங்கள் பரமன்
நதியொடு கொன்றைமரலை முடிமேலணிந்தென்
உளமே புகுந்த அதனால் 4
கொதியுறு காலனங்கி நமனோடு தூதர்
கொடு நோய்களான பலவும்

அதிகுண நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே.
நஞ்சனி கண்டெனந்தை மடவாள் தனோடும்
விடையேறு நங்கள் பரமன்
துஞ்சிருள் வன்னி கொன்றை முடிமேலணிந்தென்
உளமே புகுந்த அதனால் 5
வெஞ்சின வவுணரோடு முருமிடியுமின்னும்
மிகையான பூத மவையும்
அஞ்சிடும் நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே.
வாள் வரியதள தாடை வரிகோவணத்தர்
மடவாள் தனோடு முடனாய்
நாண் மலர் வன்னி கொன்றை நதி சூடிவந்தென்
உளமே புகுந்த அதனால் 6
கோள் புரியுழுவையோடு கொலையானை கேழல்
கொடு நாகமோடு கரடி
ஆளரி நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே.
செப்பிள முலைநன் மங்கை ஒரு பாகமாக
விடையேறு செல்வனடைவார்
ஒப்பிள மதியுமப்பு முடிமேலணிந்தென்
உளமே புகுந்த அதனால்
வெப்பொடு குளிரும் வாத மிகையான பித்தும் 7
வினையான வந்து நலியா
அப்படி நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே.
வேள்படவிழி செய்தன்று விடைமேலிருந்து
மடவாளோடு முடனாய்
வான்மதிவன் கொன்றை மலர்சூடி வந்தென்
உளமே புகுந்த அதனால் 8
ஏழ்கடல் சூழிலங்கை யரையன்றனோடு
மிடரான வந்து நலியா
ஆழ்கடல் நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே.
பல பல வேடமாகும் பரினாரிபாகன்
பசுவேறு மெங்கள் பரமன்
சலமகளோ டெருக்கு முடிமேலணிந்தென்
உளமே புகுந்த அதனால்
மலர்மிசையோனு மாலு மறையோடு தேவர்
வருகாலமான பலவும் 9

அலைகடல் மேரு நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே.
கொத்தலர் குழலியோடு விசயற்கு நல்கு
குணமாயவேட விகிர்தன
மத்தமு மதியுக நாக முடிமேலணிந்தென்
உளமே புகுந்த அதனால்

புத்தரொட மணைவா தி லழிவிக்கு மண்ணல்
திருநீறு செய்மை திடமே. 10
அத்தகு நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே.
தேனமர் மொழிக்கொளாலை விளை செந்நெல்துன்னி
வளர் செம்பொனெங்கு திகழ
நான்முகனாதியாய பிரமாபுரத்து
மறைஞான ஞான முனிவன்
தானுறு கோளு நாளு மடியாரை வந்து
நலியாத வண்ண முறைசெய்
ஆனசொன் மாலையோது மடியார்கள் வானி
லரசாள் வரராணை நமதே., 11

## நாடி வந்த என் மக்களை வாழ வை! என்று தஞ்சம் அடைந்த தசரதச் சக்கரவர்த்தி பாடிய சனீஸ்வராஷ்டகம்

ஸ்ரீ, கணேசாய நமஹ : I
அஸ்ய ஸ்ரீ சனைச்சர ஸ்தோத்ர மந்த்ரஸ்ய
தசரதரிஷி :சனைச்சரோ தேவதா I
த்ரிஷ்டுப் சந்த் :I சனைச்சர
ப்ர்த்யர்த்தே ஜபே விநியோக :—
தசரத உவாச II

1 கோணோந்தகோ ரௌத்ரயமோ நத பப்ரு :
க்ஷ்ருண : சநி: பிங்களமந்தஸௌரி .I
நித்யம் ஸ்ம்ருதோ. யோ ஹரதேச பீடாம
தஸ்மை நம : ஸ்ரீ ரவிநந்தனாய II

2. ஸுரா ஸுரா : கிம்புருஷோர கேந்த்ரா
கந்தர்வ வித்யாதர பன்னகாச்ச I
பீட்யந்தி ஸர்வே விஷமஸ்திதேன
தஸ்மை நம : ஸ்ரீ ரவிநந்தனாய II

3 நரா நரேந்திரா : பசவோ மருகேந்திரா
வன்யாச்சயே கீட பதங்கப்ருங்கா I
பீட்யந்தி ஸர்வே விஷமஸ்திதேன
தஸ்மை நம : ஸ்ரீ ரவிநந்தனாய II

4 தேசாச்ச துர்காணி வனானி யத்ர
ஸேனா நிவேசா : புரபத்தனானி I
பீட்யந்தி ஸர்வே விஷமஸ்திதேன
தஸ்மை நம : ஸ்ரீ ரவிநந்தனாய II

5 திலைர்யவைர்மா குடான்ன தானை :
லோஹேன நீலாம்பர தான தோவா I
ப்ரீணாதி மந்த்ரைர் நிஜ வாஸரே ச
தஸ்மை நம : ஸ்ரீ ரவிநந்தனாய II

3 நரா நரேந்திரா : பசவோ மருகேந்திரா
வன்ய ச்சயே கீட பதங்கப்ருங்கா ।
பீட்யந்தி ஸர்வே விஷமஸ்திடுதன
தஸ்மை நம : ஸ்ரீ ரவிநந்தனாய் ॥

4 தேசாச்ச துர்காணி வனானி யத்ர
ஸேனா நிவேசா : புரபத்தனானி ।
பீட்யந்தி ஸர்வே விஷமஸ்திதேன
தஸ்மை நம : ஸ்ரீ ரவிநந்தனாய ॥

5 திலைர்யவைர்மா குடான்ன தானை :
லோஹேன நீலாம்பர தான தோவா ।
ப்ரீணாதி மந்த்ரைர் நிஜ வாஸரே ச
தஸ்மை பும : ஸ்ரீ ரவிநந்தனாய ॥

6 ப்ரயாக கூலே யமுனாதேட ச
ஸரஸ்வதி புண்யஜலே குஹாயாம் ।
யோயோகினாம் த்யான கதோ நபி ஸூக்ஷ்ம :
தஸ்மை நம : ஸ்ரீ ரவிநந்தனாய ॥

7 அந்யப்ரதேசாத் ஸ்வகருஹம் ப்ரவிஷ்ட
ஸ்திதிய வாரே ஸ நர : ஸுகீ ஸ்யாத் ।
க்வஹாத் கதோ யோ ந பு ந: ப்ரயாதி
தஸ்மைநம : ஸ்ரீ ரவிநந்தனாய ॥

8 ஸரஷ்டவ ஸ்வயம்பூர் வனத்ரயஸ்ய
த்ராதா ஹரீசோ ஹரதே பிநாகீ ।
ஏகஸ்த்ரிதா ருக்யஜுஸாம மூர்த்தி :
தஸ்மை நம : ஸ்ரீ ரவிநந்தனாய் ॥

9 சன்யஷ்டகம் ய : ப்ரபத : ப்ரபாதே
நித்யம் ஸுபுத்ரை :பசுபாந்த வைச்ச ।
படேத்து ஸௌக்யம் புவி போக யுக்த :
ப்ராப்நோதி நிர்வாண பதம் ததந்தே ॥

10 கோணஸ்த : பிங்களோ பப்ரு :
க்ருஷ்ணோ ரௌத்ரோ பித்தகோயம் ।
ஸௌரி : சனைச்சரோ மந்த :
பிப்பலா தேன ஸம்ஸ்துத ॥

11 ஏதானி தச நாமாநி ப்ராதருத்தாய ய : படேத் ।
சனைச்சரக்ருதா பீடா நகத்ாஷித் பவிஷ்யதி
இதி ஸ்ரீ சனைச்பர ஸ்தோத்ரம் ஸம்பூர்ணம்



## வறுமை ஒழிய

1 விஸ்வேஸ்ராய நரகான் தக தாரணாய
கர்ணாமிருதாய சசிசேகர தாரணாய ।
கர்பூரகாந்தி தவளாய ஜடாதராய
தாரித்ரிய துர்க்க தஹனாய நமசிவாய ॥

2 கௌரிப்ரியாய ரஜனீஸ கலாதராய
காலான் தகாய புஜகாதிப கங்கணாய ।
கங்கரதரர்ய கஜராஜ விமர்த்தனாய
தாரித்ரிய துர்க்க தஹனாய நமசிவாய ॥

3 பக்தப்ரியாய பவரோக பயாபஹாய
உத்ராய துர்க்க பவசாகர தாரணாய ।
ஜ்யோதிர் மயாய குணநாம ஸநிருத்யகாய
தாரித்ரிய துர்க்கதஹனாய நமசிவாய ॥

4 கக்வாம்பராய ஸவபஸ்ம விலேபனாய
பாலேக்ஷனபய பணிகுண்டல மண்டிதாய ।
மஞ்சீர பாத யுகளாய ஜடாதராய
தாரித்ரிய துர்க்க தஹனாய நமசிவாய ॥

5 மஞ்சானனாய பணிராஜ விபூஷயனாய
கேமாம் சுகாய புவனத்ரய மண்டிதாய ।
ஆனந்த பூமி வரதாய தமோபகாய
தாரித்ரிய துர்க்க தஹனாய நமசிவாய ॥

6 பானுப்ரியாய பவசாகர தாரணாய
காலான்தகாய கமலாசய பூஜிதாய ।
நேத்ரத்யாய சுபலக்ஷண லக்ஷிதமய
தாரித்ரிய துர்க்க தஹனாய நமசிவாய ॥

7 ராதப்ரியாய ரகுநாத வரப்ரதாய
நாமப்ரியாய நரகார்ணவ தாராணாய ।
புண்யேஷு புண்ய பரிதாய சுரார்ச்சிதாய
தாரித்ரிய துர்க்க தஹனாய நமசிவாய ॥

8 முக்தேஸ்வராய பலதாய கணேஸ்வராய
கீதப்ரியாய விருஷபேஸ்வர வாஹனாய ।
மாதங்க சர்மவசனாய மகேஸ்வராய.
தாரித்ரிய துர்க்க தஹனாய நமசிவாய ॥



# சனி பார்வை!.... ஓடு... ஓடு....



ஒரு சமயம் கைலாயத்தில் வினாயகப் பெருமானின் பிறந்தநாள் விழா விமரிசையாகக் கொண்டாட ஏற்பாடாகி யிருந்தது. விழா வன்று முப்பத்து முக்கோடி தேவர்களும் கைலாயத் திற்கு வந்தார்கள்.

அப்போது சனீஸ்வரன் சிறுவனாக இருந்தார். அவனுக்கு வினாயகருடைய பிறந்தநாள் விழாவுக்குச் செல்ல வேண்டும் என்ற விருப்பம் உண்டாயிற்று. தாயாரிடம் இதைச் சொன்னார். சாயாதேவிக்கு சனியின் தீட்சண்யம் தெரியும். அதனால் அவனைப் போக வேண்டாம் என்று தடுத்தாள். சனியோ விடவில்லை. தாயாரிடம் கெஞ்சினான். நான் ஒதுக்குப்புறமான இடத்தில் மறைந்திருந்து விழாவைப் பார்த்து வருகிறேன் என்றான். கடைசியில் தாயார் அவனைப் போக அனுமதித்தார்.

கைலாய மலை மீது சிறுவன் சனீஸ்வரன் மெல்ல ஏறி வந்து கொண்டிருந்தான். அவன் வருவதை அறிந்த பரமேஸ்வரன் அருகில் அமர்ந்திருந்த பார்வதியிடம் ''தேவி சனி வந்து கொண்டிருக்கிறான். அவன் பார்வை தீமையானது. வினாயகன் மீது பார்வைபடாமல் பாதுகாத்து வா'' என்றார்.

பார்வதிதேவி அலட்சியமாக ''என் மகன் என்னுடைய மடியில் அமர்ந்திருக்கிறான். அவனுக்கு யாருடைய பார்வையாலும் எந்தவிதத் தீங்கும் ஏற்படாது. சனியின் பார்வை ஒன்றும் செய்ய முடியாது'' என்றாள்.

அச்சமயம் சனீஸ்வரன் மலையின் மேல் பகுதிக்கு வந்து விட்டான். தேவர்கள் கந்தர்வர்கள் யட்சர்கள் அனைவரும்

கதிகலங்கிப் போனார்கள். சனீஸ்வரன் பரமேஸ்வரன், பார்வதி இருவரையும் பார்த்தார். பார்வதி தேவியின் மடியிலிருந்த வினாயகரை பார்த்தார். மறுகணம் வினாயகருடைய தலை காணாமல் போய் விட்டது.

பார்வதி தேவி பதறி போனாள். மகனுடைய தலை மறைந்த கோபத்தில் சனீஸ்வரனுக்கு ஒரு கால் முடமாகும்படி சபித்தாள்.

பரமேஸ்வரன் தேவியைச் சமாதானம் செய்தார். 'தேவி, வினாயகர் அரக்கரை எதிர்த்துப் போர் செய்யவிருக்கிறான். அவன் தலை நம்முடையதைப் போல் இருந்தால் அரக்கர்களை அவனால் வெல்ல முடியாது. சனியின் பார்வை நன்மையே செய்திருக்கிறது'' என்ற கூறி பைரவனை அழைத்தார். 'நீ செல்லும் திசையில் வடக்கு நோக்கித் தலை வைத்துப் படுத்திருப்பது எதுவா னாலும் அதன் தலையைத் துண்டித்து எடுத்து வா' என்று கட்டளையிட்டார்.

பரமேஸ்வரன் கட்டளைப்படி பைரவன் சென்ற திசையில் முதலில் ஒரு யானை வடக்கு நோக்கித் தலை வைத்துப் படுத்திருந்தது, அதன் தலையைக் கொய்து எடுத்து வந்தான். வினாயகருடைய உடலில் அந்தத் தலையைப் பொருத்தினார் பரமேஸ்வரன். இக்காரணத்தாலேயே வினாயகர் யானை முகமானார்.

## நவக்கிரகங்களை காலில் போட்ட ராவணன்

சனீஸ்வரனுடைய பார்வையின் தீட்சண்யத்தால் நாசமடைந்தவன் இலங்காபுரி மன்னன் இராவணேஸ்வரன்.

கைலயங்கிரிவாசன் பரமேஸ்வரனை தன் வீணை இசையால் மகிழ்வித்து மகத்தான வரங்களைப் பெற்றவன் இராவணன். வரத்தின் மகிமையால் மூவுலகை வென்றான். தேவர்களை அடிமையாக்கினான். நவக்கிரகங்களை தன் சிம்மாசனத்தின் படிகளாகக் கவிழ்த்து போட்டான். கிரகங்களின் மார்பின் மீது அடி எடுத்து வைப்பதற்கும் விருப்பமின்றி அவற்றைக் கவிழ்த்துப் போட்டிருந்தான்.

கர்வம் பிடித்த இராவணனுக்குத் தீமை ஏற்படவும் அவன் அழியவும் தேவர்களும் முனிவர்களும் விரும்பினார். இது நாரத முனிவருக்கும் தெரியும். அவர் ஒரு தந்திரம் செய்தார். இலங்கைக்கு வந்தார். இராவணனைக் காண சபைக்குப் போனார். இராவணன் சிம்மாசனத்தில் வீற்றிருந்தார். நாரதரைக் கண்டதும்

எழுந்து வந்து ஆசனமளித்து உபசரித்தார். அப்போது நாரதர் சலிப்புடன், 'இது என்ன இராவணா நீயோ மாவீரன். உனது சிம்மாசனத்தின் படிக்கட்டுகளாக நவக்கிரகங்களைப் போட்டிருக்கிறாய் ஆனால் அவற்றைக் குப்புறப் போட்டு விட்டாயே. இது உன் வீரத்திற்குத் தகுமா? உன் பெருமைக்கு இது இழுக்கு அல்லவா' என்றார்.

உடனே இராவணன், 'இவ்வளவு தானே இதோ திருப்பிப் போட்டு விடுகிறேன்' என்று நவக்கிரகங்களைத் திருப்பிப் போட்டான். அப்போது சனீஸ்வரனுடைய பார்வை அவன் மீது விழுந்தது. அன்றே அவனுக்கு வீழ்ச்சியும் ஆரம்பமாகியது. இராவணனின் வலிமை அழிந்தது. ஒரு மானிடனால் என்ன செய்ய முடியும் என்று அலட்சியப்படுத்தினான். அதே மானிட ராமனால் அவன் நாடு நகரத்தையும் உற்றார் உறவினரையும் இழந்தான். அவனும் அந்த நரனாலேயே மடிந்தான்.



## ஈசுவரனை துரத்திய சனி

சனீஸ்வரன் சாவ வலிமை பெற்றவன். பரமேஸ்வரனே அவனுக்கு வேண்டிய வரங்களைக் கொடுத்து சனீஸ்வரன் என்று தனக்கு அடுத்த ஸ்தானத்தை அளித்துப் பெருமைப்படுத்தினார். ஆனால் அதே பரமேஸ்வரனையும் சனீஸ்வரன் விட்டு வைக்கவில்லை. பரமேஸ்வரன் கட்டளைப் படி சனீஸ்வரன் மானிடர், தேவர், அரக்கர் ஆகிய அனைவர் வாழ்க்கையிலும் சிற்சில காலங்களில் தன் வல்லமையைக் காட்டி வருகிறார். மகா நீதிமானான

சனீஸ்வரன் அநீதியாக நடந்து கொள்வதே இல்லை.

ஒரு சமயம் பரமேஸ்வரனை சனீஸ்வரன் சிறிது காலம் பற்ற வேண்டி யிருந்தது. இதை பரமேஸ்வரனிடமே சொன்னான். அப் போது பரமேஸ்வரன் ''அப்படி உன்னால் என்னைப் பிடிக்க முடியுமா?'' என்று கேள்வி கேட்டார் அந்தக் கணமே அங்கிருந்து மறைந்தார்.

பரமேஸ்வரன் கயிலையிலிருந்து பூலோகத்திற்கு வந்தார். ஒரு தாமரைத் தடாகத்தில் தாமரைத் தண்டில் மறைந்து கொண்டார். மூன்றே முக்கால் நாழிகைக்குப் பிறகு வெளிப்பட்டார். அப்போது அவர் எதிரில் சனீஸ்வரன் நின்றிருந்தான்.

பரமேஸ்வரன் 'உன்னால் என்னைப் பற்ற முடிந்ததா?'' என்று கேட்டார்.

சனீஸ்வரன் சாந்தமாகச் சொன்னான். 'தேவதேவனே தாங்கள் வாக்களித்த வரங்களின் பலத்தாலும் தங்களுடைய கட்டளைப்படியும், நீதி தவறாமல் என் கடமைகளைச் செய்து வருகிறேன். தங்கள் கட்டளைப்படி உங்களையும் நான் சிறிது சோதனைக் குள்ளாக்க வேண்டியிருந்தது. நீங்கள் கொடுத்த வரத்தையும் கட்டளையையும் மறந்து உங்கள் வலிமையைக் காட்டத் தொடங்கினீர்கள். உங்கள் கட்டளையின் முன் உங்களுடைய வலிமை பயனற்று போய் விட்டது. அதனாலேயே மூன்றே முக்கால் நாழி தாமரைத் தண்டினுள் மறைந்திருந்தீர்கள்.

பரமேஸ்வரன் மகிழ்ந்து 'சனீஸ்வரனே நான் என் வரத்தையோ, கட்டளையையோ மறக்கவோ அலட்சியப் படுத்தவோ இல்லை. உன் பெருமையை உலகிற்கு எடுத்துக் காட்டவே இப்படிச் செய்தேன்' என்று கூறி மேலும் பல வரங்களைக் கொடுத்து மறைந்தார்.

## சனிஸ்வரனை பணிந்ததால் தசரத சக்கரவர்த்திக்கு அளித்த வரம்

சனியைப் போல் கெடுப்பவனும் இல்லை. சனியைப் போல் கொடுப்பவனும் இல்லை என்று கூறுவார்கள். சனி பகவான் அநீதியாக நடக்க மாட்டார். நீதியிலிருந்து சிறிதும் பிறழ மாட்டார். அவரை வணங்கிக் கேட்கும் வரங்களை அருளுவார்.

அயோத்தியைத் தலைநகராகக் கொண்டு கோசல நாட்டை நீதி தவறாமல் தசரத சக்கரவர்த்தி ஆண்டு வந்தார். குடிமக்களின் நன்மை ஒன்றையே பிரதானமாக எண்ணுபவன் தசரதன். அவனுடைய ஆட்சியில் மழை பொய்ப்பதில்லை. பஞ்சம் பட்டினி தலை காட்டுவதில்லை. மக்கள் சுபிட்சமாக வாழ்ந்து வந்தார்கள்.

ஒரு சமயம் ஜோதிட வல்லுநர்கள் சபைக்கு வந்தனர். அவர்கள் முகம் வாடியிருந்தது. மன்னன் காரணம் கேட்டான். 'மாமன்னா விரைவில் சனி பகவான் கார்த்திகை நட்சத்திரத்திலிருந்து ரோகிணி நட்சத்திரத்தில் பிரவேசிக்கப் போகிறார்.

சனீஸ்வரன் ரோகிணியில் புகுந்து செல்வதைத் தடுத்தால்தான் நாட்டு மக்களை பஞ்சம், பட்டினி, மரணம் போன்றவற்றியிலிருந்து காப்பாற்றலாம் என்று சக்கரவர்த்தி அறிஞர்கள், ஜோதிட வல்லுநர்கள்,முனிவர்கள் ஆகியோருடன் ஆலோசனை நடத்தினார். கடைசியாகக் குருவான வசிஷ்டர் சொன்னார். '' மாமன்னா சனீஸ்வரனின் சஞ்சா ரத்தையும் தடுப்பது இயலாத காரியம். சர்வ வல்லமையுள்ள சனீஸ்வரர் நீதிமான், அநாவசியமாக எந்த காரியத்தையும் செய்ய மாட்டார். அவருக்கு இட்ட கட்டளைப்படிதான் நடந்து கொள்வார். ஆனால் அவரைச் சந்தித்து வணங்கி வேண்டினால் வேண்டிய வரம் அளித்து அருள்வார்'.

சனீஸ்வரருடைய உலகத்தை அடைந்தார் தசரதர். சனீஸ்வரர் வெளிப்பட்டார். தசரதர் வந்துள்ள காரணத்தை அறிந்தார். என்ன வேண்டும். சொல் தருகிறேன்' என்றார் சனீஸ்வரர்.

தசரதர் வில்லை தேரில் போட்டார். கீழே இறங்கி வந்தார். சனீஸ்வரரை மும்முறை வலம் வந்து அடிகளில் பணிந்து எழுந்து நின்று கரம் குவித்து துதி செய்யத் தொடங்கினான்.

தோத்திரப் பிரியனான சனீஸ்வரர் மகிழ்ந்து, 'தசரதா வேண்டும் வரம் கேள் தருகிறேன்' என்று மறுமுறையும் சொன்னார்.

மீண்டும் பணிந்து கரங்குவித்துச் சொன்னார் தசரதர் 'தாங்கள் கார்த்திகையிலிருந்து ரோகிணி நட்சத்திரத்தில் பிரவேசித்துச் செல்லும்போது நாட்டில் பஞ்சம், பட்டினி, மரணம் போன்றவை ஏற்படாமலும், வானம் பொய்க்காமலும் இருக்க வேண்டும். மக்கள் ஒரு குறைவுமின்றி சுபீட்சமாக வாழ வேண்டும். இந்த வரம் அளித்தால்போது மானது என்றார்.



கருணை வள்ளலான சனீஸ்வரன் 'தசரதா, உன் விருப்பப்படியே நடை பெறும். மாரி பொய்க்காது. நாட்டில் பஞ்சமோ பட்டியோ, அகால மரணமோ ஏற்படாது. கவலை இன்றி வாழ்வார்கள். நீ என்னைக் குறித்து செய்த தோத்திரத்தை யார் எனக்கு விருப்பமான சனிக் கிழமையன்று சொல்லி வன்னி இலையால் என்னை அர்ச்சித்து, ஏழை எளியவர்களுக்கு அவர்களால் இயன்ற தான தர்மம் செய்கிறாரோ அவருக்கு என்னால் எந்தத் தீமையும் ஏற்படாது. அவர்களுக்குச் சௌபாக்யம் உண்டாகும் என்றார்.

தசரதன் மகிழ்ந்து சனீஸ்வரரை மும்முறை வலம் வந்து அடிபணிந்து விடைபெற்று நாடு திரும்பினார்.

நாட்டு மக்களுக்கு ஏற்படவிருந்த கொடிய பஞ்சம் பட்டினி அகன்றது. மக்கள் சுபீட்சத்துடன் வாழ்ந்தார்கள்.

நாட்டு மக்களுக்கு ஏற்படவிருந்த கொடிய பஞ்சம் பட்டினி அகன்றது. மக்கள் சுபீட்சத்துடன் வாழ்ந்தார்கள்.

* * *

## ஜோதிடத்தில் சனி

"பனிரெண்டே ழெட்டொன்பான்
பத்தைந்தை நான்கிரண்டொன்றிற்றான்
சனியனே யிருந்தா நட்டத்
தன முயிர் சேதமாகும்
தனிச்சிறை மானபங்கந்
தன்னறி வாலே மோசம்
மனை விட்டு மாடிவிட்டு
மறுநகர மேகுவானே."

ஜென்மத்தில் சனி நிற்பதால்-வியாதி வரும், அலைச்சல்.
இரண்டில்: உயிருக்கு பயம். பணக்கஷ்டம்.
நான்கில்: வேறு நகரம் குடிபோகுதல், முடக்கம்.
ஐந்தில்: புத்திர சோகம், புத்திமந்தம்.
ஏழில்: மனைவிக்குத் தோஷம்.
பத்தில்: ஜீவன பங்கம்.
பன்னிரண்டில்: தரித்திரம், சயனசுகவீனம், 3, 6, 11-ல் நன்று.

# அரசனின் பிரதிநிதி போல ஆட்சி பீடம் செய்யும் சனி பகவான்!

ஓர் அரசன் ஆட்சி புரிகிறான். அவன் எல்லாரையும் பார்ப்பதில்லை. எல்லோரும் அவனை காண முடிவதில்லை. அதனால் அரசன் எல்லோரையும் கவனிக்கவும், எல்லோருடைய குறைகளை நீக்கவும், எல்லோருக்கும் நன்மை புரியவும் பல பிரதிநிதிகளை ஏற்படுத்துகிறான். அந்தப் பிரதிநிதிகள் மக்களுக்கு நன்மை புரிகின்றனர். குற்றம் புரிகிறவர்களை தண்டிக்கின்றனர். மக்கள் 'எங்களை தண்டிக்க நீ யார்?' என்று அவர்களை கேட்டால், 'நம் அரசனுடைய ஆணைப்படி செய்கிறோம்' என்று கூறுகின்றனர். இதனால் அரசனை மக்கள் அறிகின்றனர்.

இவ்வாறு ஈசன், சூரியன், சந்திரன், அங்காரகன், புதன், குரு, சுக்கிரன், சனி, ராகு, கேது என்ற ஒன்பது கிரகங்களைத் தனக்கு பிரதிநிதிகளாக ஏற்படுத்தியிருக்கிறான். கடவுளை ஒப்புக் கொள்ளாதவர்களும் பார்க்காதவர்களும் இந்த ஒன்பது கிரகங்களை ஒப்புக் கொள்கின்றனர். விஞ்ஞானிகள் விஞ்ஞானக் கருவிகளை கொண்டு காண்கின்றனர். பண்டிதர்கள் சாஸ்திரத்தைக் கொண்டு அறிகின்றனர்.

வேதத்திற்கு சாஸ்திரம் ஓர் அங்கம். வேத புருஷனுக்கு சாஸ்திரத்தை கண்ணாக கூறுகின்றனர். அந்த சாஸ்திரத்தில் கிரகங்களின் சக்தி, அளவு, பெயர்கள், பார்வை, கொடுக்கும் பலன் முதலியவை கூறப்படுகின்றன. உலகைப் பன்னிரண்டு கூறுகளாக ஏற்படுத்திக் கொண்டு ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு கிரகம் சில காலம் தங்கியிருக்கிறது. அதாவது ஒரு ஸ்தானத்திலிருந்து மற்றொரு ஸ்தானத்திற்கு போகும்போது சில காலம் ஆகிறது.

## பலன் கொடுக்க மக்களை பிடிக்கும் சனி

ஒவ்வொரு கிரகத்திற்கும் இந்த 12 ஸ்தானங்களில் சில சொந்த வீடாகவும், உச்ச வீடாகவும், சத்துரு ஸ்தானமாகவும் நற்பலனையும் தீய பலனையும் இவை கொடுக்கின்றன. சிலருடன் சேர்க்கை யினாலும், பார்வையினாலும் பலன்கள் மாறுபடுகின்றன. ஒவ்வொரு கிரகத்திற்கும் சிலர் மித்திரர்களாகவும், சிலர் பகைவர்களாகவும், சிலர் பொதுவானவர்களாகவும் ஆகின்றனர்.

பிடிக்கிறபடியினால் கிரகங்கள் என்று சொல்லப்படுகின்றனர். அதாவது பலன் கொடுப்பதற்காக பிடிக்கின்றனர் என்பது பொருள். சுப ஸ்தானத்தில் இருந்தால் சுப பலனையும், அசுப ஸ்தானத்தில் இருந்தால் தீய பலனையும் அளிக்கின்றனர்.

## தந்தையையே தண்டித்த சனி

கிரகங்களின் ஸ்தானத்தைப் பொறுத்து நல்லவனாகவும், தீயவனாகவும் ஆகின்றன. மனிதர்களின் அகங்காரத்தை அடக்குவதற் காக சில சமயங்களில் கிரகங்கள் துன்பத்தை விளைக்கின்றன. இப்படி துன்பத்தை கொடுப்பதில் சனி கிரகம் மிக்க கொடூர மானவர். இவர் மந்த கதியையுடைவர். இவருக்கு மகரமும், கும்பமும் சொந்த வீடு. துலாம் உச்ச வீடு. மேஷம் நீச்ச வீடு. புதனும், சுக்கிரனும் மித்திரர்கள், சூரியன், சந்திரன், அங்காரகன் விரோதிகள்; குரு ஸமர்; மூன்றாம், ஏழாம், பத்தாம் இடங்கள் பார்வை. ஒரு வீட்டில் இரண்டரை ஆண்டுகள் தங்கியிருப்பார். ஒவ்வொருவரையும் இவர் ஆயுளுக்குள் மூன்று தரம் பிடித்துக் கொள்வார். ஒவ்வொரு தரமும் ஏழரை ஆண்டுக்ள் பிடிப்பார். இதைத்தான் ஏழரை நாட்டு சனியன் பிடித்துக் கொண்டுள்ளான் என்று கூறுவர். தகப்பனாரிடமே இவர் விரோதம் கொண்டாடுகிறவர் என்றால் எவ்வளவு குணம் உடையவர் என்பதை கவனிக்க வேண்டும்.

## மாற்றலாகி வரும் அதிகாரியை மதிப்பது போல் சனிக்கு மரியாதை

ஒரு ஸ்தானத்திலிருந்து மற்றொரு ஸ்தானத்திற்கு செல்லும்போது, சனீஸ்வரருக்கு விசேஷ பூஜை செய்வது வழக்கம். ஏனெனில் உலகில் ஒருவர் ஒரு பதவியில் அதிக நாள் இருந்து மாற்றலாகி மற்றோர் இடத்திற்குப் போகும்போது அவருக்கு அதிக மரியாதை செய்வார்கள். அதேபோல் சனி ஒரு ஸ்தானத்தில் அதிக நாள் தங்கியிருந்து செல்லுகிறார். மேலும், சனி ஆரம்பத்திலோ, நடுவிலோ, கடைசியிலோ கெடுதல் செய்வார். அல்லது கெடுதலையே கொடுத்துக் கொண்டும் இருப்பார். அப்படி இருந்தாலும் கடைசியிலாவது கெடுதலைச் செய்யாமல் நன்மையைச் செய்ய வேண்டுமே என்பதற்காகவும், அடுத்த ஸ்தானத்தில் செல்லும்போது தீமையைச் செய்யாமலிருப்பதற்காகவும் ஹோமம் அர்ச்சனை பூஜைகள் நடத்துவது உண்டு.

## பகவான் சிஷ்யர்களுக்கு சனியின் சிறப்பு சலுகை

சனிக்கிரகம் மகான்கள், பாவிகள் எல்லாரையும் பிடிப்பார். மகான்களைப் பிடிக்கும்போது, ''நான் தங்களைப் பிடிக்கப்போகிறேன்; அனுமதி கொடுக்க வேண்டும்'' என்று கேட்பார். அவர்கள் அதற்கு இசைவர். பிறகு பிடித்துக் கொள்வார். இப்படிப் பல யோகிகளையும், மகாராஜாக்களையும் பிடித்துப் பீடித் திருக்கிறார்.

பகவத்பாஷ்யகாரருடைய பஞ்சாசார்யர் களில் ஒருவர் திருக்கச்சி நம்பிகள். இவர் பெரிய யோகி. தேவாதிராஜனுடன் ஏகாந்தத்தில் பேசும் மகாபாக்கியத்தைப் பெற்றவர். இவரைச் சனீசுவரன் பிடிக்கக் கருதி இவரிடம் நெருங்கி வணங்கி ''ஸ்வாமி! தங்களை அடியேன் பிடிக்க வேண்டிய காலம் வந்துள்ளது. உத்தரவு கொடுக்க வேண்டும்'' என்று பிரார்த்தித்தான். நம்பிகள் இசைந்து ஒன்று கேட்டார்—''சனீஸ்வரா!

என்னை நீ பிடிப்பதனால் ஏற்படும் துன்பத்தைப் பொறுத்துக் கொள்ள நான் தயங்க மாட்டேன். ஆனால் பகவத் கைங்கா் யத்திற்கு லோபம் ஏற்படுமே என்று அஞ்சுகிறேன். ஆதலால் ஏழரை ஆண்டு என்பதைக் குறைத்துக்கொள்'' என்று கேட்டார்.

அதற்குச் சனி, ''ஏழரை மாதங்கள் பிடிக்கிறேன்'' என்று கூறினான். அவ்வளவு காலம் இறைவன் சேவை தடைப்படுமே எனப்பயந்தவராய், ''அவ்வளவு காலங்கூடத் தாங்கமாட்டேன்'' என்று நம்பிகள் கூறினார். அதற்குச் சனி, ''ஏழரை நாள்'' என்றான். முடியாது என்று நம்பிகள் கூறினார். சனி, ''ஏழரை மணி பிடித்துக் கொள்கிறேன்'' என்றான். அதற்கு நம்பிகள் ஒப்புக் கொண்டார். அதன்படி சனி பிடித்துக் கொண்டான்.

## ஏழரை மணியானாலும் மரண வேதனை உண்டு

பிறகு நம்பிகள் வழக்கம்போல் தேவாதிராஜனுக்குத் திருவால வட்டக் கைங்கா்யம் செய்துவிட்டுத் திருமாளிகைக்குத் திரும்பினார். அப்பொழுது அர்ச்சகர் சென்று திருவாராதனம் செய்ய ஆரம்பிக்கத் தங்க வட்டிலைப் பார்த்தார். வட்டிலைக் காணவில்லை. உடனே அர்ச்சகர், ''வட்டிலைக் காணவில்லை, அந்தரங்க கைங்கா்யம் செய்பவா் நம்பிகள்தாம். அவரை விசாரிக்க வேண்டும்'' என்று அதிகாரியிடம் தெரிவித்தார். அதிகாரி தர்மஸங்கடத்தில் ஆழ்ந்தார். கேட்கப் பயந்தார். எல்லா இடங்களிலும் தேடச் செய்தார். தேடினார்கள். அகப்பட வில்லை. கடைசியில் நம்பிகளை அழைத்துக் கேட்டார். நம்பிகள் அதைக் கேட்டு, வெயிலிலிட்ட புழுப் போல் துடித்தார். புண்ணில் வேல் பாய்ச்சுவது போல் மேன்மேலும் அதிகாரி கேட்டார். அப்போது சந்நதியிலிருந்து அர்ச்சகர் முதலியவர்கள் ஓடி வந்து வட்டில் ஓ உருண்டு பகவானுடைய பீடத்தின் அடியில் கிடந்திருந்ததை தெரிவித்தனர். பிறகு எல்லாரும் ஸ்ரீநம்பிகளிடம் அபராத க்ஷமாபணம் பண்ணிக் கொண்டனர். ஏழரை நாழிகை வரையில் சனி பிடித்ததனால் நம்பிகள் அவச்சொல்லாகிற மரண வேதனையை அடைந்தார். ஏழரை நாழிகையும் நீங்கி விட்டபடியால் வட்டிலும் கிடைத்து விட்டது. பழியும் அகன்று விட்டது.

## சனிக்கிழமை (சனி பகவான்) சனி பிரார்த்தனை

நீலாஞ்ஜந ஸமாபாஸம்

ரவிபுத்ரம் யமாக்ரஜம்

ச்சாயா மார்த்தாண்ட ஸம்பூதம்

தம் நமாமி ஸ்நைஸ்சரம்



சனி பகவான் கோலம்

த்வயா ஹ்ருத்வா வாமம் வபு ரபரித்ருப்தேந மநஸா
ஸரீரார்மம் ஸம்போ ரபரமி ஸங்கே ஹ்ருதமபூத்
யதேதத் த்வத்ரூபம் ஸகல மருணாபம் த்ரிநயம்
குசாப்யா மாநம்ரம் குடில ஸநி சூடால மகுடம்

**(பலன்: வியாதி, கடன், பேய், பிசாசு ஆபத்து நீங்கல்)**

★★★★★

## ஏழரை ஆண்டு சனியில் பொங்கு சனி-மங்கு சனி எது?

ஒரு மனிதனின் ஜாதகத்தில் சந்திரன் உள்ள ராசிக்கு 12-வது ராசி, 1-வது ராசி, 2-வது ராசி இவைகளில் கோசாரப்படி சனி பகவனன் (ஒவ்வொரு ராசியிலும் இரண்டரை வருடங்கள் வீதம்) சஞ்சாரம் செய்வதையே (3 X 2½ =7½ ) ஏழரை நாட்டுச் சனி என்பார்கள் இதை ஏழரை ஆண்டு சனி எனலாம்.

இந்த ஏழரை ஆண்டு காலத்தில் சனி மனிதனுடைய வாழ்க்கையில் பண நஷ்டம், உத்யோக நஷ்டம், பலவித நோய்கள், சிறைவாசம், தண்டனை போன்ற பலவிதமான இன்னல்கள் உண்டாகும்.

இந்த 7½ ஆண்டு சனி ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் மூன்று முறை வரலாமென்றும், முதல் 7½ ஆண்டு சனியை 'மங்கும் சனி' என்றும், இரண்டாவதாக 'பொங்கும் சனி' என்றும், மூன்றாவதை 'மரண சனி' என்றும் கூறுவதுண்டு.

தசாபுக்திகள் அனுகூலமாக இருப்பவர்களுக்கு ஓரளவு சிரமம் குறைவாக இருக்கலாம். ஆயினும் சனி பகவானுக்கு முறைப்படி தக்க புரோகிதர்களை கொண்டு சாந்தி செய்வதுடன், கீழ்க்கண்ட ஸ்லோகங்களையும், ஸதா ஜபம் செய்து கொண்டிருந்தால் சிரமங்கள் வந்தாலும் அவை சூரியனைக் கண்ட பனிபோல் நீங்கி விடும்.

### கர்ப்பிணி பெண்கள் விலக்க வேண்டியவை

கர்ப்பிணி யாயிருக்கும் பெண்கள் சவரம், சவத்தின் பின் போகுதல், நகங்களை அறுத்தல், சிரார்த்தத்தில் பங்கேற்றல், வீடு கட்டுதல், தூர தேச யாத்திரை, விவாகம் செய்தல், கடலில் குளித்தல் இவைகள் செய்யக் கூடாது.

மேலும் பூஜைக்கு பொருள் தயாரித்தல், பிரதிஷ்டை, உத்சவம், மலையேறுதல் இவைகளும் செய்யத்தகாதவை.

# சனி எப்படி பிடிப்பார்?

ஒரு நாள் மாலை அந்தி நேர பூஜைக்கு நேரமாகி விட்டதை உணர்ந்த நள மகாராசா அவசர அவசரமாகக் கால் கைகளை சுத்தம் செய்து கொண்டு உள்ளே சென்றான். அப்போது அவனது இடது குதி கால் பகுதியில் சிறு இடத்தில் தண்ணீர் படாமலும், அசுத்தமாகவும் காணப்பட்டது. இதுதான் தக்க தருணம் என்று சனீஸ்வரன் நளனைப் பற்றிக் கொண்டான். உடனே தன் திருவிளையாட்டை தொடங்கினான்.

நளனுடைய பங்காளியான புபசரனுடன் சூதாடச் செய்தான் சனீஸ்வரன். அதில் நளன் நாடு நகரங்களை இழந்தான். உடனே தன் பெண்ணையும் பிள்ளையையும் அவர்களுடைய மாமன் வீட்டிற்கு அனுப்பினான். தமயந்தியை அழைத்துக் கொண்டு உடுத்திய ஆடையுடன் நாட்டை விட்டுப் புறப்பட்டான். சனீஸ்வரன் அங்கும் விடவில்லை. நளனுடைய ஒரே ஆடையையும் அன்னமாக மாறிக் கவர்ந்துக் சென்றான். பிறகு தமயந்தியின் புடவையை இருவரும் உடுத்திக் கொண்டு பயணம் செய்தனர்.

## அடிமேல் அடி!

பசி தாகம் களைப்பு இவற்றால் இருவரும் வழி நடக்க இயலாமல் பாழடைந்த மண்டபத்தில் தங்கினார்கள். நள்ளிரவுக்கு நளன் கண் விழித்தான். அப்போது அங்கே ஒரு கொடுவாள் காணப்பட்டது. அதை எடுத்து இருவரும் உடுத்தியிருந்த புடவையை அறுத்தான். தமயந்தியை தனியே விட்டு அங்கிருந்து புறப்பட்டான்.

நளன் சென்ற பாதையில் காடு தீ பற்றி எரிந்து கொண்டிருந்தது. அந்தத் தீயில் கார்க்கோடகன் என்ற பாம்பு சிக்கித் தவித்துக் கொண்டிருந்தது. அதைக் கண்ட நளன் மனம் வருந்தி தீயிலிருந்து கார்க்கோடனைக் காப்பாற்றினான். உதவி செய்த நளனைக் கார்க்கோடகன் கடித்தான். அவன் உடல் முழுவதும் நீல நிறமாகி விட்டது. அத்துடன் உடலும் கூனி குலைந்து உருத்தெரியாமல் போயிற்று.

நளன் மிகவும் வருந்தினான். உதவிக்குப் பதில் இதுதானா? என்று கார்க்கோடகனையே கேட்டான்.



தேர் கும்பாபிஷேக யாகத்தில் ஸ்ரீ பஞ்ச பூத ஸ்தலம் தத்துவமாக வடிவமைக்கப்பட்டு பக்தர்களை பரவசப்படுத்தியது.

முக்காலம் உணர்ந்த கார்க்கோடகன் ''நளராசனே நீ செய்த உதவிக்குப் பதில் உதவியையே நான் செய்திருக்கிறேன். சீரும் சிறப்புமாக வாழ்ந்த நீ இப்போது கேட்பாரற்றவனாக பராரியாகி விட்டாய் உனக்கு நல்ல காலம் வரும்வரை உன்னை ஒரு நாளும் அடையாளம் கண்டு கொள்ளா மலிருக்கவே நான் இப்படிச் செய்தேன். நீ நேராக அயோத்தி மன்னன் துருபத மன்னனிடம் போ, உனக்கு குதிரை மனதை அறியும் திறனும், மந்திரமும், சமையல் செய்யவும் தெரியும் என்று சொல்லி அவனிடம் வேலையில் அமர்ந்து கொள். சமயம் வந்த போது அவனுக்கு குதிரை மனம் அறியும் மந்திரத்தை உபதேசம் செய். அவனிடமிருந்து அட்சய வித்தையைக் கற்றுக் கொள். அதன் மூலம் நீ இழந்தை அனைத்தையும் பெறுவாய். மீண்டும் பெரு வாழ்வு வாழ்வாய். இதோ அரவுரி. இதைப் பத்திரமாக வைத்துக் கொள். உனக்கு எப்போது உன் சுய உருவம் பெற விரும்புகிறாயோ அப்போது இதைப் போர்த்திக் கொள். சுந்தர வடிவம் பெறுவாய்'' என்று கூறி மறைந்தது.

நளன் மகிழ்ச்சியுடன் அரவுரியை எடுத்துப் பத்திரப்படுத்திக் கொண்டு அயோத்தியை நோக்கிச் சென்றான். மன்னனைச் சந்தித்து ''எனக்குக் குதிரைகளின் மனதை அறியும் திறம் தெரியும். சுவையாகச் சமையலும் செய்வேன். ஏதாவது வேலை தாருங்கள்'' என்று வணங்கிக் கேட்டுக் கொண்டான்.

அரசன் அவனைக் குதிரை லாயத்தைக் கவனித்துக் கொள்ளும் வேலையில் அமர்த்திக் கொண்டான்.

சில நாள்கள் சென்றது. விதர்ப்ப நாட்டு வணிகர்கள் சிலர் தமயந்தியை அடையாளம் தெரிந்து மன்னனிடம் சேர்த்தனர்.

மகளை கண்ட வீமசேனன் பெரு மகிழ்ச்சியடைந்தான். நளனைத் தேடி நாலா திசைகளிலும் ஆட்களை அனுப்பினான். அந்த ஆட்களில் வேதியன் ஒருவனும் இருந்தான். அவன் அயோத்திக்குச் சென்றான். குதிரைக் காவலாகவுள்ள நளனைக் கண்டான். நளனுடைய மேனி கறுத்து உருமாறியிருந்தாலும் அவனை அடையாளம் தெரிந்து கொண்டான். கணமும் தாமதிக்காமல் விதர்ப்ப நாட்டிற்கு வந்து செய்தியை வீமசேனனிடம் தெரிவித்தான்.

"அப்பா ஒரு தூதுவனை அயோத்தி மன்னனிடம் அனுப்புங்கள். நளன் காணாது போய் விட்டதால் தமயந்திக்கு இரண்டாவது சுயம்வரம் நாளை நடக்கிறது என்று தெரிவிக்கச் சொல்லுங்கள். பிறகு நடப்பதைப் பாருங்கள்" என்றாள் தமயந்தி.

மகளின் விருப்பப்படியே தூதுவனை அயோத்திக்கு அனுப்பினான். மன்னன் துருபதனிடம் செய்தியைத் தெரிவித்தனர் தூதர்.

துருபதன் திகைத்தான். மறு நாள் சுயம்வரமென்றால் எப்படிப் போவது. விதர்ப்ப நாட்டில் தலைநகர் குண்டிலபுரத்திற்கும் அயோத்திக்கும் நீண்ட தூரம் இருக்கிறதே என்று எண்ணினான். பிறகு குதிரை மனம் அறியும் நளன் இருக்கிறானே என்று மனம் தெளிந்தான்.

நளனை அழைத்து விவரத்தைச் சொன்னான். ரதத்தைத் தயார் செய்யக் கட்டளையிட்டான். இருவரும்


வேங்கீஸ்வரர் கோவிலில் தேர் யாக சாலையை ஒட்டி கஜ பூஜை பிரமாண்டமாக நடைபெற்றது.



ஸ்ரீ வேங்கீஸ்வரர் கோவில் பிராகாரத்தில் பிரதோஷத்தில் அலை மோதும் பக்தர்கள் கூட்டம்

ரதம் ஏறி அரசவை சென்றனர். அரண்மனையை அடைந்ததும் அவர்கள் திகைத்தனர். சுயம் வரத்திற்கான அடையாளம் எதையும் காணவில்லை.

என்னதான் நடக்கிறது பார்க்கலாம் என்று அரண்மனையினுள் சென்றான் துருபத மன்னன். அவனைக் கண்டதும் மன்னன் வீமசேனன் கௌரமாக வரவேற்றான். அவன் தங்குவதற்குத் தேவையான அனைத்தையும் செய்து தந்தான். தேரை நிறுத்தவும் தேர்ப்பாகன் வசிக்கவும் இடத்திற்கு ஏற்பாடு செய்யச் சொன்னான்.

தேர்ப்பாகன் நளனே என்று உறுதி செய்து கொண்டாள். தந்தையை அழைத்தாள். தேர்ப்பாகனை சபைக்கு அழைத்து உபசரிக்கச் சொன்னாள். வீமசேன மன்னன் தேர்ப்பாகனை சபைக்கு அழைத்து வரச் சொன்னான். அவன் வந்ததும் அவனை தக்க மரியாதையுடன் வரவேற்றான். ஓர் உயர்ந்த ஆசனத்தில் அமரச் சொன்னான். ''ஐயா உங்களுடைய தேர் ஓட்டும் திறனை அயோத்தி மன்னர் மூலம் அறிந்தேன். சமையல் கலையில் தேர்ந்தவர் என்பதை சிறார் மூலமாகவும் பணிப் பெண் வாயிலாகவும் தெரிந்து கொண்டேன். நீங்கள் உண்மையில் தேர் ஓட்டியில்லர். உங்களுடைய உண்மை உருவத்தை மறைத்துக் கொண்டிருக்கிறீர்கள். தயவு செய்து உண்மை உருவத்தைக் காட்டுங்கள்'' என்று வேண்டிக் கொண்டான்.

உண்மை உருவத்திற்கு மாற வேண்டிய தருணம் வந்ததை உணர்ந்த நளன், கார்க்கோடன் கொடுத்த அரவுரியை எடுத்து அணிந்தான். மறு கணம் முன்னிலும் அழகனாகவும் மேலும் இளையவனாகவும் மாறி நின்றான்.

தமயந்தியும் குழந்தைகளும் நளனை அடைந்து மகிழ்ந்தார்கள். அயோத்தி மன்னனுக்குப் பல பரிசுகள் வழங்கி மரியாதைகள் செய்து வழி அனுப்பினார்கள்.

ஒரு நாள் திரிலோக சஞ்சாரியான நாரதர் நளன் சபைக்கு வந்தார். அவன் நலனை விசாரித்தார். பிறகு ''மன்னா இன்னமும் சனியின் ஆதிக்கம் உன் மீது இருக்கிறது. நீ புனித நதிகளுக்கும் புனித தலங்களுக்கும் சென்று வா. உன் மனம் தெளியும், சனியின் தொல்லையும் ஒழியும்'' என்று கூறினார்.

நளன் அன்றே அரச காரியங்களைக் கவனிக்கும் பொறுப்பை அமைச்சரிடம் ஒப்படைத்தான். மனைவி தமயந்தியிடம் விடை பெற்று புனித தலங்களுக்கு யாத்திரை புறப்பட்டான்.

பல தலங்களுக்குச் சென்றான். பல புனித நதிகளில் நீராடினான். கடைசியாக திருநள்ளாறு தார்ப்பாரண்யத்திற்கு வந்தான். பிரும்ம தீர்த்தத்தில் நீராடினான். திருநீறு அணிந்து பஞ்சாட்சர மந்திரத்தை உச்சரித்துக் கொண்டே கைவிடங்க தியாகராசரைத் தரிசனம் செய்ய ஆலயத்தில் நுழைந்தான். அதுவரை பின் தொடர்ந்து வந்த சனீஸ்வர பகவான் தயங்கினான். நளன் முன்னால் வந்து நின்றான். ''நளராசனே! இவ்வளவு காலமும் உன் னுடன் இருந்து உன்னைத் துன்புறுத்தி வந்தேன். அத்துடன் கார்க் கோட கனுடைய ஆலகால விஷம் என்னை தகித்துக் கொண்டிருந்தது. நானும் படாத பாடுபட்டேன். என் கொடுமைகளை சகித்துக் கொண்டு பொறுமையாக இருந்தாய் நீ. இன்று உன்னை விட்டு விலகி இந்த


கோ பூஜை செய்யும்
சந்திரசேகர் குருக்கள்

ஆலயத்தின் மொட்டைக் கோபுரத்தின் அடியில் தங்கப் போகிறேன். உனக்கு என்ன வரம் வேண்டும் கேள் தருகிறேன்'' என்றார்.

## கெடுப்பதைப் போல் பல மடங்கு நன்மை செய்

நளன் அவரை வணங்கி இரு கரங்குவித்து ''உலகில் யாரை நீங்கள் பற்றினாலும் என்னைப்போல் துன்புறுத்தக்கூடாது. அவர்களைக் கெடுப்பதைப் போல் பன் மடங்கு நன்மை செய்ய வேண்டும். இந்த வரம் கொடுத்தால் போதும்'' என்றான்.

''நல்லது உன் விருப்பம் போலவே உலகில் யாரையும் உன் அளவு கொடுமைப்படுத்தமாட்டேன். அவர்களிடமிருந்து பறிப்பதைப்போல் பன்மடங்கு கொடுப்பேன். அவரைப் பற்றியபோது கெடுத்தாலும், விலகும்போது நன்மை செய்வேன். இது மாத்திரமல்ல. நான் ஒருவரைப் பற்றியுள்ள காலத்தில் அவர் உன் சரிதத்தைப் படித்தால் அவர்களைத் துன்புறுத்தமாட்டேன்'' என்று வாக்களித்து மொட்டைக் கோபுரத்தின் அடிபாகம் சென்று அங்கேயே நின்றார் சனீஸ்வர பகவான்.

ஆலயத்தினுள் சென்று தியாகராசரை நளன் தரிசித்தான். அவன் அருளால் ஒரு திருக்குளம் வெட்டினான் நளன். அந்த திருக்குளத்தில் நீராடி தியாகராசர், போக மூர்த்த பூண்முலையாள், சனீஸ்வரர் ஆகியோரை நாற்பது நாள் வழிபட்டான். அப்போது அவனுக்குத் தெளிவு ஏற்பட்டது. அம்மை அப்பரிடத்திலும், சனீஸ்வரர் பகவானிடத்திலும் விடைபெற்று மாவிந்த நகரத்திற்குச் சென்றான். அரசு பொறுப்பை ஏற்றான். மனைவி மக்களுடன் அரசை நேர்மையாகவும், நீதி தவறாமலும், குடிமக்களின் நன்மை ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு நீண்ட காலம் அரசாண்டான்.

நள தீர்த்தத்தில் அம்மை அப்பருக்கு அபிஷேகம் செய்து அவரை வழிபாடு செய்து வந்தால் பிணிகள் போய், கோள்களின் தொல்லைகள் அகலும், நினைத்த காரியம் சித்தியாகும் என்று திருஞான சம்பந்த சுவாமிகள் பாடிப் புகழ்ந்துள்ளார்.

''விளங்கிழை மடந்தை மலை மங்கை யொருபாகத்

துளங்கொள விருத்திய பொருத்தனிட மென்பர் வளங்கெழுவு தீபமொடு தூப மலர் தூவி

நளன்கெழுவி நாளும் வழிபாடு செய்நள்ளாறே.''



# விநாயகர், ஆஞ்சநேயர், ஐயப்பன் சிவனை பாசத்துடன் வழிபட்டு சகல சவுபாக்கியம் பெறலாம்

யாவர்க்குமாம் இறைவற்கொரு பச்சிலை
யாவர்க்குமாம் பசுவுக்கொரு வாயுறை
யாவர்க்குமாம் உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்குமாம் பிறர்க்கு இன்னுரைதானே

-திருமந்திரம்

திருமூலம் அருளிய திருமந்திரம் மேற் கண்ட பாடல் பாடி நடக்க இன்சொல், ஈகை குணம் கை கூடும். நலம் பல கிட்டும்.



## ஆஞ்சநேயர் துதி

அஞ்சிலே ஒன்று பெற்றான் அஞ்சிலே ஒன்றைத் தாவி
அஞ்சிலே ஒன்றாக ஆரியர்க்காக ஏகி
அஞ்சிலே ஒன்று பெற்ற அனங்கைக் கண்டயலார் ஊரில்
அஞ்சிலே ஒன்றை வைத்தான் அவன் எம்மை அளித்துக் காப்பான்

சனிப்பெயர்ச்சி வரப்போகிறது. என்ன செய்யுமோ என்று அஞ்சுபவர்கள் அஞ்சனை புத்திரன் ஆஞ்சநேயரை வணங்க வேண்டி பாடல்.

மனமார சிவனை வணங்கினாலும் சரி, சிரஞ்சீவி ஆஞ்சநேயரை வழிபட்டாலும் சரி, சனியால் ஏற்படக்கூடிய கஷ்டங்கள் வடிகட்டி வாராது பிற நன்மைகள் ஏற்படும் என்பதாம். விநாயகர், ஆஞ்சநேயர் போன்ற நித்திய பிரம்மச்சாரிகளையும் ஐயப்பனை யும் சேர்த்து சனியால் எந்த பாதிப்புக்கும் உள்ளாக முடியாது என்பது உலகறிந்தது.



## 2½ ஆண்டும் கஷ்டம் இருக்க வேண்டியதில்லை

ஏனெனில் இரண்டேகால் நாளில் சந்திரன் மாறுகிறது. அப்படி மற்ற கிரகங்களும் மாறுகின்றன. அவைகளின் பார்வை மாறு படுகின்றது. எனவே இரண்டரை ஆண்டும் கஷ்டம் என்று நினைக்க வேண்டாம். மகர ராசி சனி



கெடுக்குமா? யோசிக்கவும். சனி தரும தேவதை. தருமப்படி நடப்பவர்களை சனி வாட்டுமா? எந்த நிலையிலும் சொந்த பந்தம் என்று தரும நெறி தவறி நடக்காதீர். ஈசனை மறக்க வேண்டாம். ஆஞ்சநேய துதியை மறக்க வேண்டாம். சனிக்கிழமை நவக்கிரக வழிபாடு செய்யவும். தினம் சனியின் நாமத்தை பயபக்தியுடன் உச்சரிப்போமாக.

ஓம் சனீஸ்வராய நமஹ.

## 7½ சனி முடிவடையும் போது உயர்ந்த மனிதனாக சனி உயர்த்துவார்

ஏழரைச் சனி நடைபெறும் காலத்தில் கெடுதிதான் ஏற்படும் என எடுத்துக் கொள்ள முடியாது. அதில் சில காலங்கள் நற்பலனும் ஏற்படுகிறது. சனி பகவான் அலைச்சல், கஷ்டங்கள் தந்தாலும் ஏழரைச் சனி முடியும் காலத்தில் உயர்ந்த மனிதனாக உருவெடுக்க வைக்கிறது.

சனி பகவானின் ஏழரைச் சனி காலம் மொத்த நாட்கள் 2700 நாட்களாகும். இந்த ஏழரைச் சனி ஆரம்பித்தது முதல் 100 நாட்கள் சிரசு முதல் கண்டம் வரை, பிறகு 400 நாட்கள் வரை வலது புஜத்திலும் இருப்பார். அந்த சமயத்தில் ஏழரைச் சனி கொடிய பலனை நீக்கி நற்பலனைக் கொடுப்பார். அதன்பின் னர் 600 நாட்கள் பாதத்தில் இருப்பார். அக்காலத்தில் ஒரு இடத்தில் நிலையாக இருக்க முடியாத அளவிற்கு அலைச்சல், டென்ஷன், வீண் விரயம், பயம் போன்ற வற்றை ஏற்படுத்துவார். பிறகு 500 நாட்கள் இருதயத்தில் மார்பில் சஞ்சரிப்பார். அக்காலத்தில் எதிர்பாராத பணவரவு, பெயர், புகழ் கூடும் அமைப்பு, ஸ்திர சொத்து சேர்க்கை போன்ற நற்பலனை ஏற்படுத்து வார். அதன்பிறகு 400 நாட்கள் இடது புஜத்தில் சஞ்சரிப்பார். அக்காலத்தில் மனக் கவலை, வீண் தொல்லை, அமைதிக் குறைவு, தேவை இல்லாத விரயம் ஏற்படுத் துவார். பிறகு வரும் 300 நாட்கள் மீண்டும் சிரசில் இருப்பார். அப்போது பணவரவு, பெயர், புகழ், கவுரவம் கூடும் அமைப்பு, ஆபரண சேர்க்கை உண்டாகும் சூழ்நிலை ஏற்படும். அதன்பிறகு 200 நாட்கள் கண்களில் சஞ்சரிப்பார். இதனால் சுகம் அதிகமாகும். மன அமைதி ஏற்படும். பின்னர் 200 நாட்கள் வயிற்றில் சஞ்சரிப்பார். இக்காலம் மிகவும் சோதனையாகவும், சங்கடமாகவும் இருக்கும். எதையும் சமாளிக்க முடியாத நிலை உண்டாகும். ஆரம்பத்தில் 100 நாட் களும் கடைசி 200 நாட்களும் மிகவும் அதிகமான கெடுபலனை ஏழரைச்சனி உண்டாக்குகிறது.

ஏழரைச் சனி நடைபெறும் காலத்தில் ஆஞ்சநேயர் வழிபாடு செய்வது, சனிக்கிழமைகளில் விரதம் இருப்பது, எள், எண்ணை விளக்கு ஏற்றுவது, திருநள்ளாறு சென்று வருவது போன்ற பரிகாரங்களை முறையே செய்தால் கெடுபலன் குறைந்து நற்பலன்கள் உண்டாகும். ஏழரைச் சனி காலத்தில் பொதுவாக கடன் தொல்லைகள் அதிகமாகும். மன அமைதி குறையும். மிகவும் கவனமாகச் செயல்பட்டால் வாழ்வில் ஏற்றம் உண்டாகும். ஏழரைச் சனி காலம் நீலக்கல் கொண்ட மோதிரம் அணிவது நற்பலனை உண்டாக்கும்.

# சனிக்கிரகம் ஓர் ஆய்வு

இராசிக் சக்கரம் என்பது சோதிட சாஸ்திரத்தின் அடிப்படையாக உள்ளது. இந்த ராசிக் சக்கரத்தினுள் நட்சத்திரங்கள் அடங்கியுள்ளன. நவக்கிரகங்கள் ஆக்கிர மித்துள்ளன.

இராசி மண்டலம் என்பது வான மண்டலத்தில் காணப்படும் நட்சத்திரக் கூட்டங்களள்தான்.

அந்த நட்சத்திரங்களின் வகைக்கு ஏற்ப சோதிட சாஸ்திர வல்லுநர்கள் அவற்றை பன்னிரெண்டு சம பாகங்களாகப் பிரித்துள்ளனர். அந்தப் பிரிவினையை கட்ட வடிவில் அமைத்து கொடுத்திருக் கின்றனர்.

இந்தப் பிரிவை ராசிக் கட்டம் எனக் கூறுவர்.

மேஷம் முதல் மீனம் வரை பன்னி ரெண்டு ராசிகளில் ஒன்பது கிரகங்கள் சுழன்று வருகின்றன.

இவ்வாறு சுழலும் ஒன்பது கிரகங்களை நவக்கிரகம் என்று கூறுவர்.

1.சூரியன், 2.சந்திரன், 3.செவ்வாய், 4.புதன், 5.குரு, 6.சுக்கிரன், 7.சனி, 8.ராகு, 9.கேது

மேற்கண்டவையே ஒன்பது கிரகங்களின் பெயர்களாகும்.

நவக்கிரகங்களில் சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன் ஆகிய இவர்களுக்கு சொந்த வீடுகள் உண்டு. இதையே ஆட்சி வீடு எனக் கூறுவர்.

| கிரகம் | ஆட்சிவீடு |
|---|---|
| சூரியன் | சிம்மம் |
| சந்திரன் | கடகம் |
| செவ்வாய் | மேஷம்-விருச்சிகம் |
| புதன் | மிதுனம்-கன்னி |
| குரு | தனுசு-மீனம் |
| சுக்கிரன் | ரிஷபம்-துலாம் |
| சனி | மகரம்-கும்பம் |

ஒவ்வோர் இராசியே சூரியன், சந்திரன் இவர்களுக்கு ஆட்சி வீடாகிறது. மற்ற கிரகங்களுக்கோ இரண்டு ஆட்சி வீடுகள் உண்டு.

கிரகங்கள் ஆதிபத்யம் பெறுவதற்கு ஆட்சி வீடுகளே காரணமாக உள்ளது.

இந்த ஆதிபத்தியங்களைக்கொண்டு ஒரு ஜாதகருக்கு அந்த கிரகத்தினால் ஏற்படும் நன்மை விளையுமா, தீமை விளையுமா எனத் தீர்மானிக்க முடியும்.

இராகு-கேது ஆகிய கிரகங்களின் வேறு மாதிரியானது. இந்த இரண்டு கிரகங்களும் சாயா-கிரகங்களாக நிழல் கிரகங்களாக இருப்பதால் இந்த இரண்டு கிரகங்களுக்கும் ஆட்சி வீடு கிடையாது.

இந்த கிரகங்கள் இரண்டும், எந்த ராசியில் இருக்கின்றனவோ அந்த ராசியின் ஸ்தானத் துக்குரிய பலனையே அளிக்கும்.

### பூமியைவிட 765 மடங்கு கொண்ட சனி கிரகம்

பூமியை விட 765 மடங்கு எடை கொண்ட சனி கிரகம் நவக்கிரக

நாயகர்கள் குடும்பத்தில் சூரியன் தலைமை பீடத்தில் இருப்பதால் சூரியன் தவிர்த்துக் கணக்கிடும் போது சனி நவக்கிரகங்களில் ஆறாவது இடத்தைப் பெறுகிறது.

சனிபகவான் சூரியனுக்கு வெகு தொலைவில், அதாவது சூரியனிடமிருந்து ஏறத்தாழ 886 மில்லியன் மைல் தொலை வில் உலா வந்துக் கொண்டிருக்கிறார் என்பது வானியல் பூர்வமான கணக்கு ஆகும்.

அசுப கிரகங்களில் ஒன்றாகக் கருதப்படும் சனியை 'மந்த கிரகம்' என அழைப்பர்.

இதன் சஞ்சாரம் மிக மந்தமாக-மெதுவாக இருப்பதால் தான் இவ்வாறு கூறப்படுகிறது.

## சனி ஒரு ராசியை கடக்க 2½ ஆண்டுகள் ஆகும்

சனி ஓர் ராசியை 30 டிகிரியை கடப்பதற்கு இரண்டரை ஆண்டுகள் ஆகின்றன. பன்னிரண்டு ராசிகளையும் முழுமையாகச் சுற்றிக் கடக்க 30 ஆண்டுகள் ஆகும். இந்த அளவுக்கு மெதுவாக சஞ்சரிக்கும் கிரகம் வேறு இல்லை. சனி மந்த கிரகம் என அழைக்கப்படுவதற்கு இதுதான் காரணம்.

சனிக்கிரகத்தைச் சுற்றியவாறு மூன்று வளையங்கள் உள்ளன.

இந்த வளையங்கள் நச்சுத் தன்மை வாய்ந்த துகள்கள் என விண்ணியல் அறிஞர்கள் கூறுகின்றனர்.

ஆணும் பெண்ணும் இல்லாத அலியாக சனி, கிரகம் உள்ளது என்பர். என்றாலும் இது தொடர்பு கொள்ளும் கிரகத்தை யொட்டி ஆணாகவோ, பெண்ணாகவோ மாறும் இயல்புடையதாக இருக்கிறது.

தாது கிரகம், பூமி நிலைக் கிரகம், காற்று கிரகம் என்றெல்லாம் கூட சனி அழைக்கப் படுவதுண்டு.

## மேற்கு திசைக்கு அதிபதி

சனியினுடைய உருவத் தோற்றம் -வினோதமாக விசித்திரமாக இருக்கலாம்.

சனியினுடைய ஆதிக்க அடையாக நிறம் கருமையாகும். உடல் மெலிந்து ரோமம் அடர்ந்திருக்கும்.

கண்கள் குழி விழுந்திருக்கும்.

என்றுமே ஆரோக்கிய குறை அமைந் திருக்கும்.

கொடூர குணமும் கோபமும் இயல்பாக இருக்கும்.

மனபான்மையில் சோம்பல் தன்மை அதிகமாக இருக்கும்.

அழுக்கான ஆடையுடன் வறுமை நிலை கொண்டவராக இருப்பார்.

மேற்கு திசைக்கு சனி அதிபதியாகும்.

சனி 'ஈசுவரன்' என்ற மரியாதையுடன் அழைக்கப்படுவது ஒரு சிறப்பு. இத்தகு மரியாதை வேறு எந்த கிரகத்திற்கும் கிடையாது.

சனீஸ்வரனை ஆயுள் காரகன் என்றும், இரவு· நேரத்தில் பிறந்தவர்களுக்கு புதிர் காரகன் என்றும், பெண்களுக்கு மாங்கல்ய காரகன் என்றும் புகழ்ந்து கூறுவர்.

## கெடுப்பவனும் கொடுப்பவனும் சனி

"கோபமிருப்பவரிடம் தான் குணமும் இருக்கும்" என்று ஒரு பழமொழி உண்டு. இந்தப் பழமொழி சனீஸ்வரனுக்கு முற்றிலும் பொருத்தமாக உள்ளது.



**ஸ்ரீ சனீஸ்வர பகவான் புகழ்மிக்க ஸ்ரீதர்ப்பாரண்யேஸ்வர சுவாமி கோவில், திருநள்ளாறு**

பயங்கரமும், கொடூரமுமான பல தீவிரமான உணர்வுகளைப் பெற்றிருக்கும் சனீஸ்வர பகவான் தீமை செய்வதையே தொழிலாகக் கொண்டவர் என்று கருதப் படுகிறார்.

ஆனாலும் ''கெடுப்பவனும் சனி, கொடுப்பவனும் சனி'' என்று முதுமொழிக் கேற்ப மனம் வைத்து நன்மை செய்வது என்று தீர்மானித்தால் சனீஸ்வரன் அளவுக்கு நல்லவை செய்யக்கூடிய கிரகம் வேறு ஏதும் இல்லை என்று கூற வேண்டியிருக்கும்.

## சனியால் பாதிக்கப்பட்டவர்கள்

சனீஸ்வரனின் கெடுக்கும் தன்மை யுடைய இயல்புகளை இப்போது பார்ப்போம்.

பொறாமை, பயம், துக்கம், பிரவாகம் போன்ற இயல்புகள் மனிதரிடம் அமைவதற்கு சனியின் ஆதிக்கந்தான் காரணம்.

சூதாட்டம், வஞ்சனை, கடன்படல், பிற உயிர்களை வதைத்தல், வெட்கமின்மை, வீண் பேச்சு போன்றவையும் சனி பகவான் பாதிப்பினால் ஏற்படக் கூடியவையே.

காம விகாரம் கொண்டு அலைதல், ஊனமான பெண்களுடன் உறவு வைத்துக் கொள்ளல், சிறை வாசம் போன்றவற் றிற்கும் சனி பகவானே காரண கர்த்தாவாக இருக்கிறார்.

இரும்பு தொடர்புடைய தொழில்கள், யந்திரத் தொழில், விவசாயம், ஆடு, மாடு போன்ற விலங்குகளைப் பராமரித்தல் போன்ற தொழில்களை வாழ்க்கை ஆதாரமாகக் கொண்டிருப்பவர்கள் சனி பகவானின் மேலாகதிக்கத்திற்கு இலக் கானவர்கள் என்று கூறி விடலாம்.

ஈயம், கடுகு, உளுந்து, எள், எண்ணெய் போன்றவை சனி பகவானுடன் தொடர்பு கொண்டவையாகும். இந்தப் பொருட் களுடன் ஏதாவது ஒரு வகையில் தொடர்பு கொண்ட அனைவருமே சனீஸ்வரனின்

மேலாதிக்கத்தின் கீழ் உள்ளவர்கள் என்று தெரிந்து கொள்ளலாம்.

சனீஸ்வரனின் இருப்பிடங்கள் என சில கூறப்படுகின்றன.

பாலை நிலம், மயான பூமி, சுரங்கங்கள், பாழிடங்கள், புதையுண்ட இடங்கள், குகைள் போன்ற அசுத்தமயமான இடங்கள் சனி பகவானின் வாசஸ்தலங்கள்.

### சனியின் திருவிளையாடலே சிறுநீரக பாதிப்பு

சிறுநீரக பாதிப்பும் சனியின் திருவிளை யாடலே ஆகும்.

நமது உடலில் மண்ணீரல், வலது காது, எலும்புகள், பற்கள், சிறுநீரகம் போன்ற உறுப்புகள் சனி பகவானின் ஆதிக்கத்திற்கு உட்பட்டவையாகும்.

மேற்சொன்ன உடல் உறுப்புகளில் ஏற்படும் கடுமையான பிணிகளுக்கு சனி பகவானின் திருவிளையாடலே காரணமாக இருக்கும்.

உதாரணமாக, காரணம் தெரியாமல் ஏற்படும் மயக்கம், சுவாச கோசம் தொடர் புடைய ஆஸ்துமா, உடலில் துர்நீர் காரணமாக ஏற்படும் வீக்கங்கள், சிறுநீரகம் தொடர்பான கடுமையான பிணிகள், உடல் உறுப்புக் குறைவு, குஷ்டம் போன்ற கடுமையான சரும நோய்கள் சனீஸ்வரனின் பார்வையினால் ஏற்படக்கூடியவை.

### மருத்துவ சிகிச்சை மூலமும் குணமாகாது: சனிக்கு பரிகாரம் தேவை

இத்தகு பிணிகள் ஏற்பட்டிருந்தால் மருத்துவ சிகிச்சையினால் மட்டும் நலப் படுத்திக் கொள்ள முடியாது. முறைப்படி சனி பகவானை வழிபட்டு நோன்பிருந்தால் மட்டுமே நோய் குணமாகும்.

ராசியில் மகரம், கும்பம் ஆகியவை ஆட்சி வீடுகள். மற்ற கிரகங்களுக்கு உள்ளது போன்று இல்லாது, அடுத்தடுத்து இரண்டு வீடுகளை ஆட்சியாகக் கொண்ட கிரகம் சனீஸ்வரனாகும்.

இது துலாத்தில் 20 டிகிரி உச்சமும், மேஷத்தில் 20 டிகிரி நீசமும் பெறுகிறது.

பிரத்தியேகமான பார்வை சனிக்கும் உண்டு.

சனி தாம் பார்க்கும் இடங்களைவிட தாம் பார்க்கும் ஸ்தானத்தையே முக்கியமாக கருதுவார்.

ரிஷபம், கன்னி,துலாம், கும்பம் ஆகிய லக்கினத்தாருக்கு சனி நல்லது செய்யக் கூடியவர். மேஷம், கடகம், சிம்மம், மீனம் ஆகிய லக்னத்தினாருக்கு பாவியாகிறார்.

சனி பகவான் எந்த ராசியில் சஞ்சரித் திருக்கிறார் என்பதை வைத்துதான் அவரால் ஏற்படக்கூடிய பலனை நாம் அனுபவிக்க வேண்டியிருக்கும்.

நம்முடைய ராசி எதுவோ அதில் சனி பகவான் சஞ்சரிக்கும் போது அதற்கு ஏற்ற பலன்களை நாம் அனுபவிக்க வேண்டி வரும்.

## சனி கொடுத்தால் யார் தடுப்பார்: சகல சவுபாக்கியம் தரும் சனி

இதுவரை சனி பகவானின் கொடூர உள்ளம் படைத்த கொடுமைக்காரர் என்று தான் எண்ணத் தோன்றும்.

தீவிரமான இயல்பு கொண்ட சனி பகவான், கருணை உள்ளத்துடனும் தம்மை நம்பிய அடியார்களுக்கு பலவிதமான யோக மயமான பலன்களை

அள்ளி வழங்கும் இயல்பு பெற்றவராக இருக்கிறார்.

சனி பகவானின் கருணையினால் கிடைக்கக்கூடிய நன்மை தரும் யோக பலனுக்கு "சசயோகம்" என்று பெயர்.

கும்ப இராசியை லக்னம் அல்லது சந்திர லக்னமாக் கொண்டவர்களுக்கு கும்பத்தில் சனி சஞ்சரிப்பது சச யோக அமைப்பாகும்.

மிதுனம், கன்னி, தனுசு, மீனம் ஆகியவை களை தவிர மேஷம், கடகம், துலாம், மகரம் ஆகியவ இராசிகளில் ஒன்றை லக்னம் அல்லது சந்திர இராசியாகக் கொண்டவர் ளுக்கு, ரிஷபம், சிம்மம், விருச்சிகம், கும்பம் ஆகியவற்றை லக்னம் அல்லது சந்திர லக்னமாகக் கொண்டவர்களுக்கும் சச யோக பலன் கிட்டும்.

## அது என்ன சச யோகம்?

இயல்பில் சனி கொடியவராயும், கண்ணி மற்றவராயும், பாவ காரியங்களை செய் பவராயவும் இருப்பதால் இவரால் ஏற்படக் கூடிய சச யோக பலன்கள் பரிசுத்தமான- நேர்மையான வழிகளில் கிடைப்பதாக இருக்காது என்ற விஷயத்தை கவனத்தில் கொள்ள வேண்டும்.

என்றாலும் விதியை மதியால் வெல்லலாம் என்ற மூதுரைக்கு ஏற்ப, ஜாதகர்கள் தங்களுக்குக் கிடைக்கக் கூடிய நல்வாய்ப்புகளை நேர்மையாகவும், நாணயமாகவும் ஒழுக்கம் மாறாமலும் பயன் படுத்திக் கொண்டால் சச யோக பலன்கள் மூலம் பரிசுத்தமான உயர் வாழ்வு பெற வழியும் வகையும் ஏற்படும்.

## உயர்ந்த பதவி அளிக்கும் சனியின் சச யோகம்

சச யோகம் என்பது ஏதாவது ஒரு வகையில் ஏதாவது ஒரு ஆளுமைப் பதவியில் உயர்ந்த இடத்தைப் பெறுவ தாகும்.

உதாரணமாக கவர்னர், நீதிபதி, அரசாங்க அமைச்சர், சட்ட பாராளுமன்ற உறுப்பினர் கள் போன்ற உயர் பதவிகள் சச யோகம் காரணமாக கிடைக்கக் கூடும். செல்வச் செழிப்பும், சுகபோக வசதி களும், மக்களின் தலைவர் போன்ற பதவியும் இந்த சச யோகம் மூலம் அமையும்.

## குறுக்கு வழியில் பதவி உயர்வு கிடைக்கும்

தற்கால உலக சூழ்நிலையைக் கருத்தில் கொண்டு யோசிக்கும் போது, மேற் சொன்ன பதவிகளை பெரும்பாலும் முறை கேடாக்கி குறுக்கு வழியில் பெறுவதே வாழ்க்கையாக-வழக்கமாக இருக்கிறது என்பதை அனைவரும் அறிவர்.

மேற்சொன்ன பதவிகளை எட்டிப் பிடித்த பின்னர் கிடைத்திருக்கும் பதவிகளை ஆதாரமாக வைத்துக் கொண்டு முறை கேடான வழிகளில்-லஞ்ச லாவண்யங்கள் மூலம் பணம் சேர்ப்பதில் பெரும்பான்மை யினர் முனைப்பாக இருப்பதுடன்-மிகவும் எளிதான தவறான வழிகளில் லட்சக் கணக்கில் பணத்தை அள்ளிக் கட்டுகிறார் கள் என்பதும் நாடறிந்த ரகசியம்.

இத்தகைய குறுக்கு வழி முயற்சிகள் மூலம் வாழ்க்கையில் செல்வமும், செல் வாக்கும் பெறுபவர்களுக்கு சனி பகவானின் சசயோகப் பலன் காரணமாக அமைவதுண்டு.

## நியாயமாக நடந்து சனி ஆதரவை பெறலாம்

ஆனால் அறிவுள்ளவர்கள் புத்தி உள்ளவர்கள் நியாயமாக நடந்து சனி உதவியில் உயர்ந்து விடுவர் -நல்ல சிந்தனை யாளர்கள் சனி பகவானின் சச யோக அனுதாபங்களைப் பயன்படுத்தி தவறான வழியில் தங்களை உயர்த்திக் கொள்ள எண்ணுவார்கள்.

தவறான வழிகளில் மிகக் குறுகிய காலத்தில் லட்சக் கணக்கில் பணத்தை அள்ளிக் குவித்து விடுவது எளிதான சாத்தியமாகலாம்.

ஆனால் அவ்வாறு தவறான வழியில் சேர்த்த செல்வமும் சுகபோக சாதனங்களும் மனத்திற்கும் வாழ்க்கைக்கும் நிரந்தரமான மகிழ்ச்சியையும், இன்பத்தையும் அளித்து விடுவதில்லை.

இதனைக் கருத்தில் கொண்டு சனி பகவானின் சச யோகப் பலன்களை நல்ல முறையில் பெற்று நன்மை தரத்தக்க வகையில் பயன்படுத்த முயற்சி செய்ய வேண்டும்.

## செல்வம் அளித்தாலும் தீய வழியில் போனால் பணால்

சச யோகம் காரணமாக வாழ்க்கையில் உயர்ந்துவிட்ட சிலர் நல்லொழுக்கமற்ற தீயவர்களாக உலா வருவதுண்டு.

செல்வம் இருக்கும் அளவுக்கு இவர் களுக்கு நல்லொழுக்கமும், நற் சிந்தனை யும், நல்வழியில் நடக்கும் பண்பாடும் இருப்பதில்லை.

பணம் சேர்ப்பதற்காக இவர்கள் பஞ்ச மா பாதகங்களைச் செய்யத் தயங்க மாட்டார் கள்.

காமவெறி பிடித்தவர்களாக இருப்பார்கள் காமவெறியை தணித்துக் கொள்வதற்கு, இவர்கள் எவ்வளவு அக்கிரமங்களும் செய்ய தயங்கமாட்டார்கள். அயலார் மனைவிகளை இச்சித்தல்-ஆதரவற்று மாட்டிக் கொண்ட பெண்களிடம் முறை கேடாக நடந்து கொள்ளுதல், போன்று இவர்களுடைய அக்கிரமங்களுக்கு எல்லையே இருப்பதில்லை.

ஆனால் இத்தகைய பாதகச் செயல்களை மனங்கூசாமல் செய்து விட்டு இவர்களால் நிம்மதியாக இருந்து விட முடியாது. கடவுளின் கடுமையான தண்டனைக்கு என்றோ ஒரு நாள் இவர்கள் இலக்காகி படு நாசமடையவே செய்வார்கள்.

சசயோக பலன்களைப் பெறுவோர் ஜாதக ரீதியாக சரியான கிரகங்களின், முறையான சஞ்சாரம் காரணமாக மிகவும் உயர்ந்த, உத்தம புருஷர்களாக திகழ்வார்கள்.

சந்திரன் ஆட்சி உச்சம் பெற்று நல்ல நிலையை அடைந்த சச யோக ஜாதகர் மிகவும் உயர்ந்த பண்பும், நல்லொழுக் கமும், பிறர்க்கு உதவும் விசாலமான மன இயல்பும் கொண்டவர்களாக இருப்பார்கள்.

இவர்கள் மனைவியை தவிர, பிற பெண்களை சகோதரிகளாகவும், தாயாக வும் கருதுவார்கள்.

தெய்வீக எழிலும் நற்குணங்களும் வாய்ந்த பெண், இவர்களுக்கு



மனைவியாக வாய்ப்பாள். சச யோகக்காரர் பெண்களாக இருந்தால் உத்தம நல்லியல்பு கள் அமையப் பெற்ற கண்ணிய வான் கணவராக வந்து வாய்ப்பான். இவர்கள் நல்ல மக்களைப் பெற்று நானிலம் புகழ பெறுவார்கள்.

சனி பகவானின் இராசி சஞ்சார நிலை காரணமாக ஏற்படக்கூடிய பலன்களில் குறிப்பிடத்தக்க ஒன்று சன்யாச யோகமாகும்.

சனி வலிமை பெற்றிடின் சனி திசை யிலும், சந்திரன் நின்ற இராசியாதிபதி வலிமை பெற்றிடின் அந்தக் கிரக திசை யிலும் சன்யாசியாவான்.

சன்யாசி என்று சொன்னதும் பழங்கால முனிவர்கள், ரிஷிகளை மனத்தில் நினைத்து விடக்கூடாது. தற்கால நிலைக் கேற்ப அர்த்தம் கொள்ள வேண்டும்.

குடும்பத்தில் கணவன் மனைவியரி டையே ஏற்படும் தவிர்க்க இயலாத பிரிவினை சன்யாச நிலை என்று கொள்ளலாம்.

கணவன்-மனைவி சேர்ந்து வாழ முடியாத நிலையில் அவர்கள் விவாகரத்து பெற்றுத் தனித்தனியாக வாழ்வதும் ஒரு வகையில் சன்யாச நிலைதானே. கணவனோ, மனைவியோ மறுமணம் செய்து கொள்ளும் வரை அவர்கள் சன்யாசிகளாக வாழ்கிறார் கள் என்று தான் கருத வேண்டும்.

பொது நல சேவையில் முழுமையாகத் தங்களை ஈடுபடுத்திக் கொள்ள, இன்னும் சிலர் குடும்பம், சொத்து சுகங்களை அறவே ஒதுக்கிவிட்டு தனித்திருந்து மக்கள் தொண்டாற்ற சிலர் முற்படுவர்.

குடும்ப வாழ்வில் இருந்தாலும் சிலர் மத போதகர்களாக தெயவத் திருப்பணித் தொண்டில் முழு மனதாக ஈடுபட்டிருப்ப துண்டு.

இவர்களுக்கு குடும்பம், மனைவி, மக்கள் என்பது இரண்டாம் பட்சந்தான்.

இத்தகையோரும் சன்யாச வாழ்க்கை நடத்துவதாகத்தான் பொருள் கொள்ள வேண்டும்.

## கலிங்க மன்னன் பட்டபாடு

கலிங்க மன்னன் தன்னை பார்க்க வந்த பார்க்கவ முனிவரை சரியானபடி உபசரிக் கத் தவறவிட்டான்.

சினங்கொண்ட பார்க்கவ முனிவர் கலிங்க மன்னனும் அவன் மனைவியும் காட்டு யானைகளாக ஆகுமாறு சபித்து விட்டார்.

காட்டு யானைகளாக காட்டிலே சுற்றித் திரிந்து கொண்டிருந்த கலிங்க மன்னனை யும் அவன் மனைவியையும் கண்டு பரிதாபப்பட்ட நாரதர்,

திருநள்ளாறு தலத்துக்கு செல்லுமாறு அவர்களுக்கு யோசனை சொன்னார்.

திருநள்ளாறு தீர்த்தக் கரையை யானை உருவில் இருந்த கலிங்க மன்னனும் அவன் மனைவியும் சென்றடைந்தனர்.

தீர்த்தங்களில் நீராடுவோரின் உடலி லிருந்து நீர்துளிகள் கலிங்க மன்னன், அவன் மனைவி மீது பட்டதம் அவர்கள் சாபம் அகன்று சுய உருவமடைந்தார்கள்.

கலிங்க மன்னனும் அவன் மனைவியும் பரமேஸ்வரனைப் பணிந்து வழிபாட்டு தங்கள் நாடு அடைந்தனர்.

## சிரஞ்சீவி ஆஞ்சநேயரை பிடிக்க வாலில் அமர்ந்த சனி

ராம பக்த ஆஞ்சநேயரை வழிபட்டால் சனி விடுதலை உண்டு. சனி பகவானின் ஆதிக்க காலத்தில், எவ்வளவு பெரிய சக்தி மானாக இருந்தாலும் அவர்களைப் பிடிப்பதை சனிபகவானால் தவிர்க்கவே முடியாது.

இராம பக்தனான ஆஞ்சநேயரையும் ஏழரை ஆண்டுச் சனி பற்றியாக ஒரு நிலை ஏற்பட்டது.

சோதிட சாஸ்திரப்படி பார்த்தால் தனுசு இராசியில் சூரியனும் சந்திரனும் இருக்கின்ற புனித வேளையில் அஞ்சநேயர் திரு அவதாரம் எடுத்தார்.

தனுசு இராசி என்பது குரு பகவானுடைய வீடு.

சூரியனும் சந்திரனும் குருவின் வீட்டில் என்றால் அதற்கு சிறப்பான நிலை.

அப்படி சூரிய சந்திரர்கள் ஒன்றாகக் கூடும் குரு பகவான் வீட்டில் பிறந்தவர் ஆஞ்சநேயர்.

ஆஞ்சநேயருக்கு மூல நட்சத்திரம் என்பதால் அவரை சனி பகவான் பிடித்தாக வேண்டும் என்பது விதி.

அப்போது இராம அவதாரம் முடிந்து கிருஷ்ண அவதாரம் நடந்து கொண்டிருந்தது.

என்றும் சிரஞ்சீவியான அவர் எந்தக் காலத்திலும் வாழும் பாக்கியம் பெற்றவர்.

இராமபிரானுக்கு அர்ச்சனை செய்வதற் காக ஆஞ்சநேயர் மலர் பறிக்க நந்தவனம் நோக்கிச் சென்ற சமயம் அவரைப் பிடிக்க வந்த சனிபகவான் வரை நேரடியாகச் சந்திக்க அஞ்சி அவருடைய வால் மீது ஏறி அமர்ந்துக் கொண்டார்.

## ராமநாமம் பாடி குதித்ததால் ஆஞ்சநேயரை விட்ட சனி

நிலைமையைப் புரிந்து கொண்ட ஆஞ்ச நேயர் மனதிற்குள் சிரித்தவாறு இராம பிரான் திருநாமங்களைப் பாடியவாறு துள்ளிக் துள்ளிக் குதித்து ஆனந்த நடன மாடத் தொடங்கினார்.

சனி பகவான் நிலை மிகவும் சங்கடமாகி விட்டது. ஆஞ்சநேயரின் குதிப்பு காரண மாக அவர் உடம்பெல்லாம் வலியெடுத் தது. தாங்க இயலாத வேதனையுடன் சனி பகவான் அனுமனை நோக்கி '' ஆஞ்சநேயா, நீ எப்பொழுது குதிப்பதை நிறுத்தப் போகிறாய்'' என்று பரிதாபமாக கேட்டார்.

'' என் மீது உமது ஆதிக்கம் ஏழரை ஆண்டு காலம் இருக்குமல்லவா? அதுவரை குதித்துக் கொண்டுதான் இருப்பேன்'' என்றார் ஆஞ்சநேயர்.

சனி பகவானின் ஏழரை ஆண்டு ஆதிக்கம் என்றால் ஏழரை ஆண்டுகளும்



சனீஸ்வர பகவான்
திருநள்ளாறு

சனி பகவானால் ஏற்படக்கூடிய பாதிப்புகளை அனுபவித்துத்தான் ஆக வேண்டும் என்பது பொது நிதி.

என்றாலும் கிரக சஞ்சார அடிப்படையில் சில சமயம் சனிபகவானின் பாதிப்பு சற்று குறையவோ பல அனுகூலங்களை உண்டாக் கவோ செய்யும். ஆனால் ஏழரை ஆண்டு காலமும் சனிபகவானின் பிடிப்பு இருந்து கொண்டுதான் இருக்கும்.

## இப்போதே உன்னை விட்டு விடுகிறேன்

ஆனால் ஆஞ்சநேயர் விவகாரத்தில் நிலைமை தலைகீழாக மாறிவிட்டது. ஆஞ்சநேயரின் அட்டகாசத்தை சனி பகவானால் தாங்கிக் கொள்ள இயல வில்லை.

இனியும் சமாளிக்க முடியாது என்று உணர்ந்த சனி பகவான் ''அப்பா ஆஞ்சநேயா, நான் இப்போதே உன்னை விட்டு விடுகிறேன். குதிப்பதை நிறுத்து'' என்று கேட்டுக் கொண்டார்.

ஆஞ்சநேயர் சிரித்துக் கொண்டே குதிப்பதை நிறுத்தி சனி பகவானை விடுவித்தார்.

''ஆஞ்சநேயா, இராம பக்தனான உன்னுடைய பராக்கிரமத்தின் முன் நான் எம்மாத்திரம்? உன்னை நான் பிடிக்க வந்ததே தவறுதான். நான் விடைபெற்றுக் கொள்கிறேன்'' என்றார் சனிபகவான்.

## சனி பகவானை பாராட்டி ஆஞ்சநேயர் துதி

ஆஞ்சநேயர் சனி பகவானை வணங்கி ''நவக்கிரக நாயகர்களில் குறிப்பிடத்தக்க ஒருவரான தங்களிடம் மோத வேண்டிய நிலை ஏற்பட்டதற்காக வருந்துகிறேன். எந்த வகையிலும் தங்களை அவமரியாதை செய்வது தன் நோக்கமல்ல. எம்பெருமான் இராமபிரானின் அன்றாட பூஜை வழி பாடுகள் தவறிவிடுமே என்ற மனக்குறை யால்தான் சற்று அதிக பிரசங்கிதனமாக நடந்து கொண்டேன். என்னை மன்னிக்க வேண்டும்!'' என்று கேட்டுக் கொண்டார்.

## ஆஞ்சநேயரை வழிபட்டால் நான் கடுமையாக இருக்கமாட்டேன்

''இராம பக்தா-உனக்கு ஒரு வரமும் அளிக்கிறேன். என்னால் கடுமையாகப் பாதிக்கப்பட்ட யாரும் உன்னை வழிபட்டு உன் அருளைப் பெற்றால் அவர்களுக்கு என்னுடைய கடுமையான பாதிப்பிலிருந்து விடுதலை அளிக்கிறேன்'' எனக் கூறிவிட்டு சனி பகவான் சென்றார்.

***

# தர்மத்தை கடைப்பிடித்தால் இன்பவாழ்க்கை நிச்சயம்!


வேங்கீஸ்வரர் சாந்தநாயகி

''உலகமே அதர்மத்தை நோக்கித்தான் ஓடிக் கொண்டிருக்கிறது. நாலு பேர் மெச்ச வாழ வேண்டுமானால், நாமும் அதர்மத்தை மேற்கொள்ளவேண்டும்'' என்று தற்காலத் தில் பலர் கூறுகிறார்கள்.

''கிருதயுகத்தில் புண்ணியம் நூற்றுக்கு நூறு பங்கு இருந்தது. அப்போது புலியும், ஆடும் பகை மறந்து ஒரே துறையில் நீர் அருந்தின. இப்போது கலியுகத்தில் ''கால் பங்கு புண்ணியம், முக்கால் பங்கு பாவம் இருக்கும்'' என்று சொல்லப் பட்டிருக்கிறது.

இதை உறுதிப்படுத்தும் வகையிலேயே நாமும் அன்றாட வாழ்க்கையில் பல அனுபவங்களைப் பெற்று வருகிறோம்.

'நாலு பேர் மெச்ச வாழ்வது' என்றால் என்ன அர்த்தம்? 'உலக மக்கள் மெச்ச வாழ்வது' என்று நாம் சாதாரணமாகப் பொருள் கொள்கிறோம். உண்மையில் பொருள் அதுவன்று. மாதா, பிதா, குரு, தெய்வம் ஆகிய நாலு பேர் மனம் மகிழும் வகையில் நாம் வாழ வேண்டும். அதைத் தான், அந்த நாலு பேரைத்தான், 'நாலு பேர் மெச்ச வாழ்வது' என்பது குறிப்பிடுகிறது.

புலி, தன் இயல்புக்கு ஏற்ப புலியாக வாழ்கிறது. பசு, தன் இயல்புக்கு ஏற்ப பசுவாக வாழ்கிறது. இதுபோலவே சிங்கம், நாய், பூனை, மயில், மரம், செடி, கொடி ஆகியவையெல்லாம் தத்தம் இயல்புக்கு ஏற்பவே வாழ்கின்றன. ஆனால் மனிதன் மட்டும் மனிதனுக்கு உரிய மேலான பண்பு களோடு மனிதனாக வாழ்வதில்லை.

மனிதராகப் பிறந்தாலும் மனிதராகவே வாழ்பவர் அரிது. மிருகங்களாகவும், மிருகங் களின் சகோதர்களாகவும் பலரும் வாழ் கிறோம்.

கண் இல்லாவிட்டாலும் வாழலாம், கால் இல்லாவிட்டாலும் வாழலாம். ஆனால் உயிர் இல்லாவிட்டால் வாழ முடியாது. 'சான்றோருக்குத் தர்மம் உயிர் போன்றது, ஏன், உயிரைவிடவும் மேலானது'' என்று கூடச் சொல்லலாம்.

''தர்மமும் ஒழுக்கமும் இல்லாதவர்கள் புழுவுக்குச் சமானம்'' என்று ஸ்ரீராம கிருஷ்ண பரமஹம்சர் சொல்வது வழக்கம்.

### தர்மம் இல்லாவிடில் வாழ்க்கை பிரேக் இல்லாத கார் ஆகும்

தர்மம், கட்டுப்பாடு வரையறை இல்லாத வாழ்க்கை பிரேக் இல்லாத வண்டி போன்றது. இந்தத் தர்மத்திற்குக் கட்டுப்படுதல் என்பதை மனிதராகப் பிறந்த ஒவ்வொருவரும் கடைப் பிடிக்க வேண்டும். தர்மம் இல்லாதவர்கள் வேர் இல்லாத மரம் போன்றவர்கள்.

நெருப்பை நமது தேவைக்கு ஏற்பக் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருந்து பயன் படுத்தினால் நல்ல சுவையான உணவு தயாரிக்கலாம். மாறாக, அதைக் கட்டுப்பாடின்றித் தன் போக்கில் விட்டாலோ நம்மையும் எரிக்கும், ஊரையும் எரிக்கும்.

அதுபோலவேதான் காட்டாற்று வெள்ள மும், காட்டாற்று வெள்ளத்தை

அணை கட்டிக் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருந்து பயன்படுத்தினால் மின்சாரம் எடுத்தல், நீர்ப்பாசனம் போன்ற ஆக்கப்பூர்வமான பல பணிகளுக்குப் பயன்படுத்தலாம். அவ்வித மின்றி அந்தக் காட்டாற்று வெள்ளத்தைத் தன் போக்கில் விட்டு விட்டாலோ அது வீடுகள், கால்நடைகள், பயிர் பச்சைகள் அனைத்தையும் அழித்துவிடும்.

நெருப்பைப்போல, காட்டாற்று வெள் ளத்தைப் போல மனதைக் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருந்து, தர்ம வழியில் செலுத்தினால் தான் நன்மை உண்டு. மாறாக அத்து மீறினால் அவதி தான்.

அறவழியில் பொருள் தேட வேண்டும். அவ்விதம் தேடிய பொருளை, அறவழியில் அனுபவிக்க வேண்டும். இம்மைக்குப் பழியும், மறுமைக்குப் பாவமும் விளைவிக்கும் செயல்களைத் தவிர்க்க வேண்டும். தர்மத்தை கடைபிடித்தல் பிற்காலத்தில் உதவும் கருவூலமாக அமையும்.



பன்னிரு ஜோதிர் லிங்கம்

## தர்மத்தை பின்பற்றி வெற்றி

வாழ்க்கையில் நாம் வெற்றி பெறத்தான் வேண்டும். ஆனால் அந்த வெற்றி அறத்தின் வெற்றியாக இருக்கவேண்டும். அறத்தைப் பின்பற்றியதால் அடைந்த வெற்றியாக இருக்கவேண்டும்.

தர்மத்தைப் பின்பற்றுவது காரணமாகத் தாற்காலிகமாகத் துன்பங்கள் நேர்வது உண்டு. ஆனால் முடிவில் நித்தியமான சுகம், தர்மத்தைப் பின்பற்றுவனுக்கே உரியது. 'தருமத்தைச் சூது கவ்வும். பின்பு தர்மம் மறுபடியும் வெல்லும்'.

தர்மமும் நம்மை வாழ வைக்கும். தர்மத்தை நாம் அழித்தால் தர்மமும் நம்மை அழித்து விடும்' என்பது பொருள்.

## கடவுளுக்கு தொண்டு செய்

50 ஆண்டுகளுக்கு முன்பு மக்கள் மனதில் நிலவிய மகிழ்ச்சி, ஆரோக்கியம், மன நிம்மதி ஆகியவற்றை இன்று காண முடியவில்லை. வீடுதோறும் புதிய பிரச்சனைகள், புதிய நோய்கள், மனித சுபாவங்களில் அதிருப்தி அளிக்கக் கூடிய மாறுதல் ஆகியவை நிலவி வருகிறது.

ஆன்மீகத்தில் நம்பிக்கையின்மையும், உலக போகங்களில் ஆசைவைத்து ஒழுக்கத்தைப் புறக்கணித்தலும் இத்தகைய மன மாறுதலுக்கு உண்மை யான காரணங்களாகும்.

பண்டைக்காலத்தில் குழந்தைப் பருவம் முதலே இறை பக்தியையும், வாழ்க்கை வழி நெறி முறைகளையும் பெரியோர்கள் புகட்டி வந்தனர். தற்காலக் குழந்தைகளுக்கு இத்தகைய நெறி முறைகள் என்னவென்றே தெரிவதில்லை. இவற்றை இளவயதில் இருந்தே தெரிந்து கொண்டால், ஒவ்வொருவருடைய வாழ்க்கையும் துன்பம் குறைந்து இன்பம் நிறைந்ததாக அமையும் என்பதில் ஐயமில்லை.

என்.முத்தையா செட்டியார்.




<u>தொகுப்பு ஆசிரியர் :</u>
ஏ.கே. சித்தரஞ்சன்
20/1, புதிய எண், 63, வன்னியர் தெரு,
சூளைமேடு, சென்னை - 600 094.
போன் : 24830100





<u>வெளியீடு</u>
கோட்டையூர்
என். முத்தையா செட்டியார்
தலைவர்
**ஸ்ரீ பிரதோஷ பக்தர்கள் சபை,**
சன்னதி தெரு, வடபழனி, சென்னை - 26.

இலவசமாக அச்சிட்டு

தயாரிப்பில் பெரும் பங்கேற்றவர்கள்

# ஸ்ரீ அக்ஷயா கிராபிக்ஸ்

இந்த நூல் உருவாவதற்கு உதவியவர்களுக்கு நன்றி

ஆர்.எம்.பி. கிருஷ்ணநாடார் கே. ராஜலெட்சுமி
ஏ.கே. சித்தரஞ்சன் - ஹேமா ரஞ்சன்
ஏ.கே.எஸ். பெரியசாமி, ஏ.எஸ். லட்சுமி

கே. கல்யாண குமார் - கே. சாந்தினி
கே. ராஜேஷ் / கே. ரோகிணி

கோபுர தரிசனம் கோடி நன்மை

வெளியீடு : ஸ்ரீபிரதோஷ பக்த சபை

G. பிரேம் ஆனந்த்
பரம்பரை அறங்காவலர்

கோட்டையூர் என். முத்தையா செட்டியார்
தலைவர்